"விக்ருஷ்டமுக்த முஞ்சாராத் த்ருதே மத்யே விளம்பித:

நீசோச்சயோர்ச வர்ணானாம் ஸுச்ராவ்யம் ச்லாக்ய முச்யதே."

என்பார், மன்னர் கும்பர். கீழ்ஸ்தாயி, மேல் ஸ்தாயிகளுக்குரிய ஸ்வரங்களைக் கொண்டு மிக அழகான முக்தாயிஸ்வரங்கள் அமைக்கப்பெற்று விளங்கும் பாடலானது, த்ருதம், மத்யமம், விளம்பம் என்ற மூவிதத் தாளவேகத்தில் சுவைதருமாறு இசைக்கப்படும் வர்ணங்கள் சிறப்பானவையாகக் கருதப்படுவன.

ஸ்வரங்களின் பல்வேறு வகையான கோர்வைகளாலான அழகுசெறிந்த மற்றும் அபூர்வமான பிரயோகங்களை உள்ளடக்கியிருப்பது 'வர்ணம்', இது நான்கு உறுப்புகளைக் கொண்டிருத்தல் வேண்டுமென 'நாட்ய சாஸ்திரம்' வகுத்துள்ளது. அவை:- ஆரோஹி, அவரோஹி, ஸ்தாயீ, ஸஞ்சாரீ ஆகியன.

"ஆரோஹீ ச அவரோஹீ ச ஸ்தாயீ ஸஞ்சாரிணௌ ததா" (29.9)

ஆரோஹீ - (ஆரோஹணம்) - ஸ்வரங்களின் ஏற்ற அடுக்கு

அவரோஹீ-(அவரோஹணம்) ஸ்வரங்களின் இறக்க அடுக்கு

ஸ்தாயீ-ஒரு ஸ்வரத்தில் நிலைத்தல் அல்லது அதன் அளவை நீட்டல்.

ஸஞ்சாரீ-ஸ்வரத்தின் பலவகைப்பட்ட ஸஞ்சாரம்.

இசை பயிலுகின்ற காலத்தில் கற்பிக்கப்படும் 'கீதம்' எனும் பாடல் வகை ராக இலக்கணத்தை விளக்க உதவியதுண்டு. பொதுவானவொரு சிறுபாடல்தான் 'கீதம்'; முற்காலத்தில் ராக இலக்கணங்கள் இவற்றின் வாயிலாகவே விவரிக்கப் பட்டமையால், 'லக்ஷண கீதங்கள்' என அவை பெயர் பெற்றன. ராகங்களின் முழுமையான ஸ்வரூபத்தையும், அதற்கு

அழகூட்டும் ஸ்வரச்சேர்க்கைகளையும், பிரயோகங்களையும் விளக்கும் தன்மை கீதங்களில் குறைவாகவேயிருந்த காரணத்தினால்தானோ என்னவோ, வர்ணங்கள் தோன்றின. வெவ்வேறு விதமான ஸஞ்சாரங்களின் உதவியோடு ஒருவித வர்ணனையைச் செய்வதாக அமைவது வர்ணம். ஆரோஹி போன்ற நான்கு உறுப்புகளையும் இப்பாடல்வகையில் காணலாம்.

'வர்ணம்' எனும் பாடல்வகை இருவிதப்பட்டதாகும். 1. தான வர்ணம், 2. பதவர்ணம்.

பாடற்பயிற்சித் திட்டத்தில் கீதங்களையடுத்தும், கிருதிகளுக்கு முன்பாகவும் இடம் பெறுவது 'தானவர்ணம்': இசையரங்குகளில் நிகழ்ச்சியின் தொடக்கத்தில் இசைக்கப் பெறுவதும் இதுவேயாகும்.

'தானம்' எனப்படும் பாடுகின்ற முறையொன்றினை யொப்பதாக, ஸ்வரங்கள் கோர்க்கப்பட்டுள்ள காரணத்தால், இதற்கு 'தானவர்ணம்' என்ற பெயரெழுந்தது. சாரீரத்தைச் செம்மையாக வளப்படுத்தி, எவ்விதமான கமகத்தையும், எந்த வேகத்திலும் இசைக்கும் திறமையை அளிப்பது 'தான வர்ணம். பதங்களுக்கிடையேயுள்ள இடைவெளி, உயிரெழுத்துக்களை மிகுதியாகப் பெற்ற சொற்கள் ஆகியவையெல்லாம் குரலை வளப்படுத்தப் பெரிதும் உதவுபவை. ஒரு இசைக் கலைஞனுடைய குரல் வளம், ராக இலக்கண அறிவு போன்றவற்றை, அவனுக்கு எவ்வளவு தானவர்ணங்கள் பாடமுண்டு என்பதைக் கொண்டே தீர்மானிக்கின்ற மரபு அண்மைக்காலம் வரை பெரியோரிடம் இருந்து வந்ததேயாகும்.

எந்தப் பாடலாயினும் சரி, அது இரு முக்கிய அங்கங்களைக் கொண்டே உருவாக்கப்படுவதாகும். 1. உருவ அமைப்பு, 2. உள்ளே பொதிந்துள்ள கருத்தின் தன்மை. வர்ணம் என்பதன் உருவ அமைப்பில் ஐந்து பகுதிகள் உண்டு.

1. பல்லவி - தொடக்க நிலை

2. அனுபல்லவி - இடைநிலைப்பகுதி

3. முக்தாயிஸ்வரம் - அனுபல்லவியில், தொடர்ச்சியாக இணைக்கப்பெறும் ஸ்வரக் கோர்வைகள். இதனைச் சிலர் 'சிட்டைஸ்வரம்' என்றும் கூறுவர்.

4. எத்துகடப் பல்லவி - மூன்றாம் நிலைப்பட்ட பகுதி; கிருதி அல்லது கீர்த்தனையின் சரணத்துக்கொப்பானது. இது சுருக்கமாக 'எத்துகட' என்று அழைக்கப்பெறும்.

5. எத்துகட ஸ்வரங்கள் - எத்துகடப் பல்லவியைத் தொடர்ந்து, இடம்பெறும் ஸ்வரக் கோர்வைகளின் வரிசைகள் இவை ஒவ்வொன்றின் முடிவிலும் ஒருமுறை எத்துகடப் பல்லவி இசைக்கப் பெறும்.

இந்த ஐந்து பகுதிகளும் இரு பொதுவான தலைப்புகளில் அடங்குவன. பல்லவி முதல் முக்தாயிஸ்வரம் நிறைவாக இருப்பவற்றைப் "பூர்வாங்கம்" (முதற்தொகுதி) என்றும், எத்துகடப் பல்லவி, அதனைத் தொடரும் எத்துகட ஸ்வரக் கோர்வைகள் ஆகியவை 'உத்தராங்கம்' (பின் தொகுதி) எனவும் குறிக்கப் பெறுகின்றன.

வேண்டுகோள் போன்றவொரு செய்தியினைப் பல்லவியும், எவரிடம் இந்த வேண்டுகோள் விடுக்கப் பெறுமோ அந்த பாட்டுடைத் தலைவனின் பெயரை அனுபல்லவியும் கொண்டிருப்பது வழக்கம். ஒரு கீர்த்தனையின் கடைநிலைப்

பகுதியான சரணம் போன்று, பெரும்பாலும் ஒரே ஆவர்த்தத்தில் (தாளச்சுற்றில்) அமைந்து, முந்தைய இரு பகுதிகளுக்குத் தொடர்புடைய கருத்தினைத் தாங்கும் சொற்களால் அமைவது, 'எத்துகடப் பல்லவி'. தெலுங்கு, கன்னடம் போன்ற மொழிகளில் 'எத்துகட' எனுஞ்சொல்லுக்குத் 'தொடக்கம்', 'தாக்குகின்ற நிலை' என்றெல்லாம் பொருளுண்டு. உத்தாரங்கத்தின் தொடக்கமாக அமையுங்காரணத்தால், 'எத்துகட' என்ற பெயர் அதற்கு ஏற்பட்டிருக்கக் கூடும். மன்னர் ஷாஹ்ஜீ -தன் பாடற்படைப்புகள் சிலவற்றில், 'சரணம்' என்பதற்குப் பதிலாக 'எத்துகட' என்ற சொல்லையே கையாண்டுள்ளார். எத்துகடப் பல்லவியாக அமையும் ஸாஹித்யம் சிறியதாகவிருப்பதோடன்றிப், பல சந்தர்ப்பங்களில் முழுமையான பொருளைத் தருவதாக அல்லாமலேயே இருக்கும். 'முக்தாயிஸ்வரம்' என்பதைச் சிலர் 'சிட்டைஸ்வரம்' எனக் குறிப்பிடுவர். பெயரைப் பொறுத்த அளவில் இவ்விரண்டும் சிறிது மாறுபட்டிருப்பினும், அமைப்பிலும், தன்மையிலும் ஒரே விதமானவைதான். ஆயினும், இச்சொற்கள் எப்போது தனித்துக் கையாளப் பெறுகின்றனவென்பதை நோக்குதல் அவசியம்.

'முக்தாயி' என்றால் 'முடித்தல்' எனப்பொருள். பூர்வாங்கத்தின் முடிவினைக் குறிக்கும் வகையில் அமைவது 'முக்தாயிஸ்வரம்' இதற்குப் பொருத்தமான ஸாஹித்யமும் இருக்கலாம். இவ்வாறு ஸாஹித்யத்துடனோ அல்லாமல் வெறும் ஸ்வரக்கோர்வையாகவோ, கிருதிகளில் இடம் பெறுவதே 'சிட்டைஸ்வரம்' எனப்படுகிறது. கிருதிகளுக்குச் சிட்டை ஸ்வரம் இருக்கவேண்டுமென்ற நியதி கிடையாது; மாறாக, வர்ணங்களில் 'முக்தாயிஸ்வரம்' இருந்தேயாக வேண்டும். பல வர்ணங்களைத் தன் 'ஸங்கீத ஸம்ப்ரதாய ப்ரதர்சினீ'யில் கொடுத்துள்ள ஸுப்பராம தீக்ஷிதர், அவற்றில் 'முக்தாயிஸ்வரங்கள்' என்ற சொல்லைத்தான் கையாண்டுள்ளார். 'எத்துகடப் பல்லவி'யைத் தொடருபவை 'எத்துகட ஸ்வரங்கள்'. இவ்வரிசையொவ்வொன்றுமே ஒன்று,

அல்லது இரண்டு அல்லது நான்கு ஆவர்த்தங்களில் அமைந்தவை. 'முக்தாயிஸ்வர'மோ இரண்டு அல்லது நான்கு ஆவர்த்தங்களில் மட்டுமே காணப்பெறும். கிருதிகளில் சிட்டைஸ்வரம் என்பது ஒரு இணைப்பு; ஆனால், கட்டாயம் அற்றது. வர்ணங்களில் முக்தாயிஸ்வரம், பிரிக்க முடியாதவொரு அங்கம். வர்ணமொன்றினை இயற்றுபவரேதான் முக்தாயி ஸ்வரத்தையும் அமைப்பார். ஆனால், கிருதியை இயற்றுபவரே, சிட்டைஸ்வரத்தையும் உருவாக்குவார் எனக் கூறுவதற்கில்லை. ஒருவருடைய கிருதிக்கு, மற்றொருவர் சிட்டைஸ்வரம் அமைப்பதும் சகஜம். கதனகுதூஹல ராகத்தில், பட்டணம் சுப்பிரமணிய அய்யர் இயற்றியுள்ள 'ரகுவம்ஸ ஸுதா' என்ற கிருதிக்கு, அவருடைய ஸமகாலத்து இசைவிற்பன்னரான திருவையாறு சுப்பிரமணிய அய்யர் என்பார் சிட்டைஸ்வரம் அமைத்துச் சேர்த்திருக்கிறார். வேறொருவர் 'சிட்டைஸ்வரம்' அமைக்கும்போது, அதற்குரிய ஸாஹித்யத்தையும் இயற்றுவதில்லை; ஏனெனில், ஸாஹித்யம், கிருதியின் அங்கமாக ஆவதால், அந்தக் கிருதிகர்த்தாவே இதையும் இயற்றியுள்ளார் என்ற தவறான கருத்து எழுந்துவிடக் கூடாது.

தானவர்ணங்களில், பொதுவாக, முக்தாயி மற்றும் எத்துகட ஸ்வரங்களுக்கு ஸாஹித்யம் இருக்காது. இவ்விதிக்கு விலக்காகவும் ஓரிரு தானவர்ணங்கள் உள்ளன. பச்சிமிரியம் ஆதியப்பய்யாவின் பைரவீராக 'விரிபோணி' என்ற வர்ணத்தை (இந்நூலில் கொடுக்கப் பட்டுள்ளது). இதற்கு உதாரணமாகக் கூறலாம். வர்ணங்களின் 'முக்தாயி' மற்றும் 'எத்துகட' ஸ்வரங்களுக்கு ஸாஹித்யத்தை (அவை, தானவர்ணங்களாக விருந்து, தேவையுமிருந்தால்) அந்த வர்ணகர்த்தாவேதான் படைப்பாரென்ற நியதிக்குக் கூட ஓரேயொரு விலக்கையும் காணமுடிகிறது. ராமஸ்வாமி தீக்ஷிதரின் ஸ்ரீரஞ்ஜனிராக 'ஸாமி நின்னே கோரி' என்ற வர்ணத்தின் நான்கு எத்துகட ஸ்வரங்களுக்குமே, (ஒவ்வொரு ஸ்வர வரிசைக்கு ஒருவராக)

நான்கு வெவ்வேறு கலைஞர்கள், ஸாஹித்யங்களை இயற்றியிருக்கிறார்கள். கற்பனையாக ஸ்வரங்களைப் பல்வேறு அமைப்பில் பதித்துப் பாடுவதற்கான முறைக்கு முன்மாதிரிகளாகத் திகழ்பவை, எத்துகட ஸ்வரங்கள்.

வர்ணத்தின் கருத்தடைவு பக்தி, காதல் அல்லது ஒரு போஷகரைப் போற்றுவது என்பனவான ஒன்றைக் கொண்டிருக்கும். ராகத்தின் பிரகாசமான பல்வேறு கூறுகளை அழகுபடச் சித்தரிப்பதும், வர்ணகர்த்தாவின் குறிக்கோளாகும். தானவர்ணங்கள் யாவுமே, மத்யம காலப் பிரமாணத்தில் தான் இசைக்கப் பெறுவன. சில சமயங்களில், அவற்றை மூன்றுவிதமான காலப்பிரமாணங்களில் இசைப்பதுமுண்டு.

தானவர்ணம் என்பதை முதன்முதலில் இயற்றியவர், பச்சிமிரியம் ஆதியப்பய்யாவே என்று பொதுவாகக் கருதப்படுகின்றது. அதன் காரணமாகவே, அவரைத் 'தானவர்ண மார்க்கதர்சி' என்று குறிப்பிடும் வழக்கமெழுந்தது. 'விரிபோணி'யென்ற பைரவீராக வர்ணத்தின் மூலம் புகழ்மிகுந்த அவரால் 'மதவதீ'' என்ற பந்துவராளி ராக வர்ணமும் இயற்றப்பட்டதாகக் கூறப்படுகிறது. இவ்விரண்டைத் தவிர அவரது இதரப் பாடற்படைப்புகள் பற்றி நமக்கு எதுவும் தெரியாமற் போய்விட்டது. அவர், தஞ்சையரசர், பிரதாபஸிம்ஹனின் காலத்தவர் (1741-1764) என்பார் ஸுப்பராம தீக்ஷிதர். இதை ஏற்ற டாக்டர் வே.ராகவன், ஆதியப்பய்யா இரண்டாம் துளஜா மன்னரின் காலத்திலும் (1763-1787) இருந்தவர் என்கிறார். அமரஸிம்ஹன் (1787-1802) மற்றும் இரண்டாம் சரபோஜி (1798-1832) ஆகியோர் காலத்தைச் சேர்ந்த பல்லவி கோபாலய்யர், 'ஸங்கீத மும்மூர்த்தி'களில் ஒருவராகிய சியாமா சாஸ்திரிகள் போன்றோர் ஆதியப்பய்யாவின் சீடர்கள் எனப்படும். உடையார்பாளையம் ஜமீந்தார், யுவரங்க பூபதியின் அவையிலிருந்த 'பூலோக கந்தர்வ' தஞ்சாவூர் நாராயணஸ்வாமி அய்யர் என்பாரும் ஆதியப்பய்யாவின்

சீடரே என எழுதியுள்ளார், டாக்டர் உ.வே.சாமிநாதய்யர். தச்சூர் சிங்காரச் சார்லுவின் 'காயக ஸித்தாஞ்ஜனம்' (2 ஆம்பகுதி) எனும் நூல், ஆதியப்பய்யா, புதுக்கோட்டை ஸமஸ்தான வித்வானாகச் சுமார் 1750க்கும் 1820க்கும் இடைப்பட்ட காலத்தில் வாழ்ந்தவர் எனப் பேசும்.

''புதுக்கோட்டையிலிருக்கும் இசைக் கலைஞர் ஆதியப்பய்யாவின் இல்லத்தை அரசாங்கம் எடுத்துக்கொண்டு அதற்குரியவொரு தொகையை அவருக்குக் கொடுக்கப்படுகிறது",

என்று தஞ்சை மராட்டிய மன்னர்களின் 1834ஆம் ஆண்டுக்கான மோடி ஆவணக்குறிப்பு தெரிவிக்கிறது (175இ). இதன்மூலம் அவர் 1834ஆம் ஆண்டில் வாழ்ந்திருக்கிறார் என்பதும், சிலகாலம் தஞ்சையிலும் வசித்தவர் என்பதும் அறியமுடிகிறது. இவர் அறுபத்தேழு ஆண்டுகள் வாழ்ந்தார் என்பதை அவருடைய பரம்பரையினர் வைத்துள்ள குறிப்பின்படி தெரிகிறது. இந்தக் கணக்கினைக் கொண்டு பார்க்கையில் ஆதியப்பய்யா, பிரதாபஸிம்ஸனின் காலத்தைச் சேர்ந்தவரென்று கூறவியலாது.

கோவிந்தஸாமய்யா என்பவரின் ஐந்து வர்ணங்கள் நமக்குக் கிடைக்கின்றன. இவர் கார்வேடிநகரம் மன்னர் மாகராஜு வெங்கடப் பெருமாள் என்பவரால் பெரிதும் ஆதரிக்கப்பட்டவர். வெங்கடப் பெருமாளின் ஆட்சிக்காலம் 1719-1732 என்றும், அவரையடுத்துப் பட்டத்துக்கு வந்த, வெங்கடப் பெருமாளின் சகோதரர் குமாரரான மாகராஜு கார்வேடிராஜு 1733 முதல் அரசோச்சினாரென்றும், டாக்டர் எஸ்.கங்கப்பா என்பவர் எழுதியுள்ளார். அவ்வூர் அரண்மனை ஆவணங்களின் ஆதாரத்துடன் இதை மறுத்து, வெங்கடப் பெருமாளின் காலம் 1680-1710 என்பதே சரியானதென்று, டாக்டர் பி.ரஜனிகாந்த ராவ் கணிக்கின்றார். இதனை நாட்டியத்துறை அறிஞர், டாக்டர் ஆருத்ராவும் ஏற்றுக் கொண்டுள்ளார். எப்படியிருப்பினும்,

கோவிந்தஸாமய்யா, ஆதியப்பய்யாவை விடச் சில ஆண்டுகளாவது மூத்தவராக இருந்திருத்தல் வேண்டும்.

ஸொண்டி வெங்கடரமணய்யாவின் தந்தையான ,ஸொண்டி வெங்கடஸுப்பய்யா என்பவரே, முதன் முதலாக வர்ணங்களை இயற்றினார் என்றும் சிலர் வாதிப்பதுண்டு. இவரது பிலஹரிராக வர்ணம் நமக்குக் கிடைத்துள்ளது. ஸத்குரு தியாகராஜரின் குருவென்று கருதப்படுபவர், வெங்கடரமணய்யா.

வெங்கடஸுப்பய்யாவும், ஆதியப்பய்யாவும் சம காலத்தவர்களேயாயினும் பிந்தியவரைக் காட்டிலும் வெங்கடஸுப்பய்யா வயதில் இளையவர் என்கிறார் ஸுப்பராமதீக்ஷிதர். இரண்டாம் துளஜா மன்னர் காலத்தவரான வெங்கடஸுப்பய்யா, மணலி சின்னையா முதலியாரின் ஸன்மானங்களைப் பெற்றவர் என்றும் கூறப்படும்.

'காயக ஸித்தாஞ்ஜனம்' எனும் நூலோ, வீணை ராமகாளஹஸ்தி சாஸ்திரி (அய்யா) என்பவரின் சீடராக ஸொண்டி வெங்கடஸுப்பய்யாவின் பெயரைத் தருகிறது. இந்த ராமகாஹஸ்தி அய்யாவுக்குப் பேரணூர் என்ற கிராமத்தை இரண்டாம் துளஜா மன்னர், ஸர்வமானியமாக அளித்துள்ளார். தியாகராஜரின் தாய்வழிப் பாட்டனார் இந்த ராமகாளஹஸ்தி அய்யா என்றும் கூறப்படும்.

பைடால குருமூர்த்தி சாஸ்திரி, ஸொண்டி வெங்கடஸுப்பய்யாவின் சீடர் என்று குறிப்பிட வந்த, பேராசிரியர் பி.ஸாம்பமூர்த்தி ('ஹிந்து' பத்திரிகை 10.1.1971), வெங்கட ஸுப்பய்யாவை நாராயண தீர்த்தரின் சீடப்பரம்பரையினராகவும் எழுதியுள்ளார். (Great Composers - Vol.1).

தன் 'ப்ரதம அப்யாஸ புஸ்தகம்' என்ற நூலில் (ப.128) 'தேவாதி தேவ' எனும் கிருதிக்கான அடிக்குறிப்பில் ஒரு செய்தியினைத் தருகிறார், ஸுப்பராம தீக்ஷிதர்..

"......வெங்கடமகி ப்ரபௌத்ருலகு முத்து வெங்கடமகி சிஷ்யுலைன ஸொண்டி வெங்கடஸுப்பய்ய காரிவத்த ஸங்கீத வித்யனு ஸமர்த்தகம்புகானப்யஸிஞ்சி வாக்கேயகாரக ச்ரேஷ்டுடை விலஸில்லின த்யாகராஜய்ய....."

தியாகராஜர், வெங்கடமகியின் கொள்ளுப் பேரனாகிய முத்து வெங்கடமகியின் சீடரான ஸொண்டி வெங்கட ஸுப்பய்யாவின் சீடர் (!) என்பது இங்கே தெரிவிக்கப்பட்டுள்ளது. எவ்வாறு நோக்கினும், ஆதியப்பய்யா, வெங்கடஸுப்பய்யா இருவருக்கும் காலத்தால் முற்பட்டவர், கார்வேடிநகர் கோவிந்தஸாமய்யா என்பது தெளிவாகின்றது. எனவே 'வர்ண ரசனாமார்க்கதர்சி' என்று அவரைக் குறிப்பிடுவதே சாலப் பொருந்தும்.

வர்ணங்கள் தோற்றம் பெறத் தொடங்கிய காலத்தில், எத்துகட ஸ்வரங்களுக்குப்பின் அமையும் 'அனுபந்தம்' என்ற ஸாஹித்யப் பகுதி இணைக்கப் பெற்றிருந்தது. 'விரிபோணி' என்ற பைரவிராக வர்ணத்தில் கூட 'அனுபந்தம்' உண்டு. பின்னால் வந்த வர்ணகர்த்தாக்கள் இப்படியொரு பகுதியை இணைப்பதை விடுத்தனர்.

தானவர்ணம் பற்றிப் பார்த்தோம். வர்ணங்களின் மற்றொரு வகையான பதவர்ணம் என்பது நாட்டியத்துக்கென்றே அமைந்ததாகும். 'பாவம்' மிகுதியாக இருத்தலின் பொருட்டு இது எப்பொழுதும் விளம்ப காலப்பிரமாணத்திலேயே பாடப்பெறும். இதனால், இவ்வர்ணத்தைச் 'சௌக வர்ணம்' எனவும் கூறுவதுண்டு. தானவர்ணத்தை இது பெரிதும் ஒத்திருப்பினும், முக்தாயி, எத்துகட ஸ்வரங்களுக்கும் ஸாஹித்யம் உண்டென்பது ஒரு முக்கிய வேறுபாடு ஆகும். இசைக்கப்படும் காலப்பிரமாணத்திலும், கருத்திலும் இன்பச்சுவையில் தோய்ந்த 'பதங்கள்' எனும் பாடல்வகையின் அடிப்படையில் தோன்றியதால், இதனைப் 'பதவர்ணம்' எனப் பெயரிட்டுக்

குறிக்கலாயினர். தானவர்ணம் போல இடைவெளியைக் கொண்டதாக இல்லாமல், அதிக அளவில் பதங்கள் (வார்த்தைகள்) கோர்க்கப்பட்டிருப்பதாலும், இதற்கு இப்பெயர் எழுந்திருக்க இடமுண்டு. சில பதவர்ணங்களின் இடையே ஜதிகளும் பின்னப்பட்டு இருக்கலாம். அவற்றைப் 'பதஜதிவர்ணங்கள்' என்று நூலாசிரியர்கள் கொடுத்திருந்தாலும் அவை 'ஸ்வரஜதி'களேயாகும்.

அடவுகளைக் கொண்ட நிருத்தத்துக்கும், அபிநயத்தைக் கொண்ட நிருத்யத்துக்கும் நிறைவான இடமளிப்பது பதவர்ணம். எத்துகட ஸ்வர-ஸாஹித்யங்கள், மிகுதியான அணிகலன்களுக் கொப்பானவை. முதலில், ஸ்வர அமைப்பு பாடப் பெற்றுப், பின்னர், அதற்குரிய ஸாஹித்யம் பாடப் பெறுவது வழக்கம். ஸ்வரங்களைப் பாடுகையில் நிருத்தமும், ஸாஹித்யத்தைப் பாடுகையில் நிருத்யமும் நடத்தப்பெறும். பாவம், ராகம், தாளம் என்ற முக்கூட்டு செறிந்து விளங்கும் பதவர்ணமே, ஆடல் நிகழ்ச்சியில் தலையாய அம்சமாகும். ஆடுபவரின் புலமையையும், பெருந்திறமையையும் சோதிக்கும் உரைகல்லாக அமைந்தது இது.

இனிமையின் ஸாரம், தாள நுட்பங்கள் எனும் இரு ஆயுதங்களைக் கொண்டு மிக உயர்வான பாடல் வகையைப், பதவர்ணத்தைச் சமைப்பதில், நமது தென்னகத்து நாட்டியாச்சாரியர்கள், தமது கற்பனையைப் பொழிந்துள்ளனர் எனலாம். ரஸத்தை (சுவையை) எழுப்பவல்ல பாவத்தைப் பெரிதும் வெளிப்படுத்துவதாக இது அமைந்திருக்கிறது. பாவம் எங்கே இருக்குமோ அங்கேதான் சுவையுமிருக்கும். (யதோ பாவஸ்ததோ ரஸ:) செழிப்பான கற்பனைத்திறன் இந்த ஆடலாசான்களுக்கிருந்தது. புத்திக் கூர்மைக்கும், உணர்ச்சிக்கும் இடைப்பட்டதாகத் தோற்றம் பெறும் கற்பனைத்திறன், அதேசமயத்தில், அவ்விரண்டையுமே தன்னுள் ஏற்று விளங்குவதாகும், ஒருபதவர்ணத்தை இயற்ற

வேண்டுமானால் பெருந்திறமை வேண்டும்; கலையில் அதிகப் புலமை, ராகங்களின் இலக்கணம் பற்றிய தெள்ளிய அறிவு, தாளமெனும் ஸாகரத்தின் ஆழத்தில் மூழ்கும் ஆற்றல் இவையெல்லாம் இருக்கவேண்டும். அதைப்போலவே, இவ்வாறு இயற்றப்படும் பதவர்ணத்தைச் செயல்படுத்துவதென்பதும் அத்தனை எளிதன்று; சிறந்த கலையறிவும், நிறைந்த பயிற்சியும் அதற்குத் தேவை. முறையாகவும், முழுமையாகவும் ஒரு பதவர்ணத்தை ஆடி அபிநயிக்கக் குறைந்தபக்ஷம் நாற்பத்தியைந்து நிமிடங்களாவது வேண்டும். நாட்டியம் பெறுகின்றபோது, பதவர்ணத்தின் ஒவ்வொரு கட்டத்திலும் கடினமான 'தீர்மானங்களும்' மிகுந்திருப்பது இயற்கை. 'தீர்மானம்' என்றால் 'முடிவு', 'கடைநிலை', என்றெல்லாம் பொருள்படும். இது லயக்கணிதத்தை உள்ளிட்டதாகக் கொண்டு அமைக்கப்பெறும் 'தீர்மானம்' என்கிற ஜதிக்கோர்வைகளை, அடவுகளாலான (பாதச் செய்கைகள்) நிருத்தம் மூலம், ஆடுபவர் வெளிப்படுத்துவார். ஆடற்கலையின் முதுகெலும்பு என்று கூறத்தக்க லயம் என்கிற அஸ்திவாரத்தின்மீது எழுப்பப் பெறும் ஜதிகள், கனல் தெறிப்பவை. வேறெந்த நாட்டுக் கலையிலும் காணமுடியாத தனித்தன்மை பெற்ற அம்சம் இது. நாட்டியத்திலும், நாட்டிய நாடகங்களிலும் இடம்பெறும் ஜதிகள், ஸந்தர்ப்பத்துக்கேற்றவாறு வெவ்வேறு பெயர்களைப் பெறுவதுண்டு.

பாத்ரஜதி - நாட்டிய நாடகங்களில், குறிப்பிட்ட பாத்திரம் ஒவ்வொரு முறை தோன்றும் போதும் இடம்பெறும்

முகஜதி - நாட்டிய நாடகங்களில் ஒவ்வொரு காட்சித் தொடக்கத்திலும் அமைந்து வருவது.

அந்த்ய ஜதி - ஒவ்வொரு காட்சி முடிவிலும் வரக்கூடியது.

மகுடஜதி - பாடலின் ஒவ்வொரு கட்டத்திலும் இடையே இசைக்கப்படுவது. பதவர்ணம், ஸ்வரஜதி முதலியவற்றில் இதன் பங்கு சிறப்பானதாகும்.

'ரஸம்' என்பது, நம் நாட்டுக் காவிய மற்றும் கலையின்பங்களின் ஆதாரமாகவும், பயனாகவும் அமைகின்றவொரு அனுபவம்.

வாக்கேயக்காரரின் கற்பனைக்கு உத்வேகமும், எழுச்சியும் அளிப்பது 'ரஸம்'தான். இதன் பயனாகக் காண்போரும், கேட்போரும் அளவிலாப் பேரானந்தம் அடைவர். காவியம் அல்லது பாடலின் அழகைப் பெருக்குவது 'ரஸ'த்தின் அருமையான மணமேயாகும்.

பதவர்ணம் என்பது, பதங்களைப் போலவே பக்தி-சிருங்காரம் எனும் ரஸத்தால் உருவகப்படுத்தப் பெறும் பாடல் வகை. இதற்கு விலக்காக ஓரிரண்டு தானவர்ணங்கள் இருக்கக் கூடுமேதவிர, ஸ்வரஜதிகளும், பதவர்ணங்களும் இதனாலேயே சமைக்கப்படுபவை. இறைவனை அடைவதற்குரிய எண்ணிறந்த வழிகளை விளக்கும் பக்தி நூல்கள், அவற்றிலொன்றாக மதுர பாவம் அல்லது மதுர பக்தியையும் குறிப்பிடுகின்றன. இதுவே, சிருங்கார ரஸம் நிரம்பியதாக நாயக-நாயிகா (தலைவன், தலைவி) என்ற கற்பனை அமைப்புடன் பதங்களையும், பதவர்ணங்களையும் உருவாக்க வாக்கேயக் காரர்களைத் தூண்டிவிட்டது.

சிருங்காரம், ஹாஸ்யம், கருணை, ரௌத்ரம், வீரம், பயானகம், பீபத்ஸம், அத்புதம் எனும் எட்டு ரஸங்களை வகைப்படுத்துகின்றது, 'நாட்ய சாஸ்திரம்' (அத்.6 ஸ்லோ 5-6) இவற்றையெல்லாம் தனக்கு முற்பட்ட காலத்து நூல்களிலிருந்தே பரதர் எடுத்துக்கூறியிருக்கிறார். ஒன்பதாம் நூற்றாண்டைச் சேர்ந்த 'திவாகரம்' எனும் தமிழ் நிகண்டு (அகராதி) 'சாந்தம்' என்பதனை ஒன்பதாவது ரஸமாகக் குறிப்பிடும். 'சாந்தம்' என்பதனை ஒரு ரஸமாக முதன்முதலில் கூறியவர் உத்படரே (779-813) என்பது டாக்டர் வே.ராகவன் வழங்கியுள்ள கருத்து. அவரே மேலும் கூறுவதாவது.

"உத்படருக்கு நெடுங்காலம் முன்பே எழுந்த, சமண நூலாகிய 'அனுயோகேத்வார ஸூத்ரம்' என்பதில் சாந்த ரஸமானது 'ப்ரசாந்த' என்ற பெயரில் உணர்த்தப்பட்டு விட்டது".

எவ்வாறோ 'நவரஸங்கள்' என்பவை வரையறுக்கப்பட்டிருக்கின்றன. இவையனைத்திலும் அரசனுக்கொப்பாக விளங்குவது சிருங்காரமேயாகும். பிற ரஸங்கள் யாவினையும் தன்னுள்ளடக்கியிருத்தலால், சிருங்கார ரஸத்தை 'ரஸ ராஜசேகரா' என்பார்கள். உணர்வுகள் அனைத்திலும் இனிமை பெரிதும் பயப்பது சிருங்காரமே; இந்த ரஸத்தில் தோய்ந்த பாடல்கள் மட்டுமே பெருஞ்சுவையூட்ட வல்லவை என்கிறார் ஆனந்த வர்த்தனர்.

"ச்ருங்கார ஏவ மதுர: பர: ப்ரஹலாதனோ ரஸ:
தன்மயம் காவ்யமாச்ரித்ய மாதுர்யம் ப்ரதிதிஷ்டதி ||
(த்வன்யாலோகம் 2:7)

கூர்ந்து ஆயுங்கால், மற்ற சுவைகளையெல்லாம், சிருங்காரம் தன்னுள் அடக்கியிருப்பது புலனாகும். இதனால், வாக்கேயக்காரர்களை-அதிலும்-நாட்டியத்துக்கான பாடல்களை உருவாக்கியவர்களை, இந்தச் சிருங்கார ரஸம் பெரிதும் கவர்ந்திருக்கிறது. சிருங்காரத்தை அடித்தளத்தில் கொண்ட காதற்சுவைப் பாடல்கள், சங்க காலத்து 'அக' நூல்களிலேயே நிறைந்திருப்பதால், இந்தக் கருத்து பாடலாசிரியர்களுக்குப் புதிதல்ல

சிருங்காரத்திலும் இருவகைகள் உள்ளன. 1. ஸம்போகம் (சேர்ந்திருத்தல்) 2. விப்ரலம்பம் (பிரிவுநிலை) காதலனும், காதலியும் சேர்ந்திருக்கையில் எதையும் தெரிவிக்க அல்லது விளக்க அவசியமில்லை. வார்த்தைகளுக்கு அங்கே வேலை யில்லை. மாறாக அவர்கள் பிரிந்திருக்கும் நிலையில், பிரிவுத்துயர் ஆற்றாமல் காதலனோ, காதலியோ தாம்படும் துயரை வெளிப்படுத்த வேண்டியதாகின்றது. மனம்திறந்து

கூறும்போதுதானே மார்க்கம் பிறக்கும்! இந்தப் பிரிவுத் துயரை எத்தனையோ விதங்களிலும், எவ் வளவு நேரம் காலம் கடப்பது கூட அறியாமல் வெளிப்படுத்த இடமிருக்கிறது. ஆனந்த வர்த்தனர் கூறுவார்:

"ச்ருங்காரே விப்ரலம்பாக்யே கருணே ச ப்ரகர்ஷதத்
மாதுர்யமார்த்ரதாம் யாதி யஸ்தத்ராதிகம் மன:"

மனமானது சிருங்காரம், கருணை என்பவற்றில் உருகி ஒன்றிவிடுமாதலால் இவ்விரு ரஸங்களுமே இனிமை நிறைந்தவை என்பது இதன் கருத்து.

ஹர்ஷதேவரின் (606-647) "நாகானந்தம்" என்ற நாடகத்தின் நாந்திச்லோகமே நம்மை வியப்பில் ஆழ்த்துகின்றது. புத்தபிரானின் துதியாக அது அமைந்திருப்பினும், சுலோகத்தின் முதல் மூன்று அடிகளும் விப்ரலம்ப சிருங்காரத்தை உள்ளடக்கியதோர் வஞ்சப் புகழ்ச்சியாகவே அமைந்துள்ளது.

"த்யான வ்யாஜமுபேத்ய சிந்தயஸி காமுன்மீல்ய சக்ஷு:
க்ஷணம்பச்யானங்க சராதுரம் ஜனமிமம் த்ராதாபி நோ ரக்ஷஸி|
மித்யா காருணிகோஅஸி நிர்க்ருண தரஸ்த்வத்த: குதோஅன்ய:-புமான்
ஸேர்ஷ்யம் மாரவதூபிரித்ய பிஹிதோ புத்தோ ஜின: பாது வ:||"

"தியானிப்பது போல் கண்களை மூடியவாறு யாரை எண்ணியிருக்கிறீர்? ஒருகணம் உமது கண்களைத் திறந்து மாரன்கணைகளால் துயருறும் எங்களைப்பாரும்; காப்பவரென்று உம்மைப் புகழ்கின்றனரே தவிர, நீர்காப்பதில்லை; கருணைமிக்கவரென்று பொய்யாக நீர் வருணிக்கப்படுகிறீர்; உம்மைவிடக் கருணையற்ற மனிதர் வேறுளரோ?' என்று இவ்வாறு மாரனின் ஸ்திரீகளால், தாபத்தோடு கூறப்பெறும் வெற்றி வீரராகிய புத்தபிரான் உங்களைக் காக்கட்டும்." இறைவணக்கமாகிய முதல் சுலோகத்திலேயே விப்ரலம்ப சிருங்காரம் மேலிட்டிருக்கிறது. 'நாட்யசாஸ்திரத்தின்

பத்தொன்பதாம் அத்தியாயத்தில் கூறப்பட்ட பன்னிரண்டு லாஸ்யாங்கங்களில் பல, இவ்விதச் சிருங்கார்த்தையே கொண்டுள்ளன. மற்ற ரஸங்களை விட வன்மை மிகுதியாகப் பெற்றுள்ள விப்ரலம்ப சிருங்காரம், நாட்டியப் பாடல்களுக்குக் கட்டாயமாக்கப்பட்டதில் வியப்பிருக்க முடியாது.

பதங்கள், பதவர்ணங்கள் போன்ற பாடல்களில் மூன்று பாத்திரங்கள் மட்டுமே பின்னிப் பிணைந்துள்ளன. நாயகன், நாயகி அவளுடைய தோழியான ஸகீ என்போரே அந்த மூன்று பாத்திரங்கள். நாயக-நாயகியை முன்னிட்டதாக எழுந்த பக்தி சிருங்காரம், கி.பி ஐந்தாம் நூற்றாண்டில் நல்ல வளர்ச்சி பெறத் தொடங்கியது. ஜீவாத்மா என்பது பரமாத்மாவோடு இணையத் துடிப்பதையே நாயகி, நாயகனாகக் கொள்ளப்படுகின்றது. இவ்வித இணைப்புக்கு வழிகாட்டி உதவும் குரு, 'ஸகீ' எனும் பாத்திரமாகச் சித்திரிக்கப்படுகிறார். இதற்கென எழுந்த பாடல்கள், வெளிப்பார்வைக்கு இன்பச்சுவை மிகுதியான ஆபாஸமானவையாகத் தோன்றினும், அடித்தளத்தில் பக்தியையே கொண்டவை.

ஆலயவளாகங்களிலிருந்து, அரசவைகளில் நாட்டியம் இடங்கொள்ளத் தொடங்கிய காலகட்டத்தில், அரசனோ அல்லது வேறு வள்ளலோ, பாட்டுடைத் தலைவனாக அமையும்படியான மாற்றம் நிகழ்ந்தது. 'நந்திக் கலம்பகம்' (கி.பி 835) போன்ற தமிழ் இலக்கியங்களின் தாக்கம், பாடலாசிரியர்களை மன்னன் மீது பாடலியற்றத் தூண்டியது. பூமிக்கே தனித்தலைவன் என்றும், ஆயகலைகள் அனைத்திலும் இணையற்ற புலமைமிக்கோன் என்றும், வீரத்தின் மானிட உருவகமென்றும் பலவாறு மன்னர்கள் புகழப்படலாயினர். இவ்வித நிலை எட்டாம் நூற்றாண்டிலேயே இருந்திருக்க வேண்டுமென்பது, சுந்தரமூர்த்தி ஸ்வாமிகளின் 'திருப்புகலூர்ப் பதிகம்' வாயிலாக அறிய முடிகிறது.

"மிடுக்குஇலாதானை வீமனே விரல் விசையனே என்றும் .......
நரைகள் போந்து மெய் தளர்ந்து மூத்து உடல் நடுங்கி நிற்கும்
இக்கிழவனை வரைகள் போல் தோளனே என்றும்......நோயனைத்
தடந்தோளனே என்றும்......கற்றிலாதானைக் கற்று நல்லவனே
காமனையொக்குமே என்றும்......."

வீணரை வரம்பின்றிப் புகழ்வதை இவ்வாறு மறைமுகமாகச் சாடிப் போகிறார், தம்பிரான் தோழர். இவற்றுக்கெல்லாம் தமக்கு அருகதையில்லையென்று நினையாது, அரசன் தாம் எப்படிப்பட்ட சிறப்புகளைப் பெற்றுள்ளோம் என்று மூடமாய் மயங்கும் மகிழ்ச்சியில், நாட்டிய நங்கைக்கும், அவளது ஆசானுக்கும் விலைமதிப்பற்ற ஸன்மானங்களை வாரி வழங்குவது ஸஹஜமாயிற்று. நாட்டியப் பாடல்கள் புனைவோர், சில தனவந்தர்களையும், குறுநிலக்கிழார்களையுங்கூட ஒதுக்கிவிடவில்லை. இவ்வாறு ஏராளமான ஸ்வரஜதிகள், பதவர்ணங்கள், பதங்கள் முதலியன உருப்பெற்றன

இசைக்கும் ஆடலுக்குமிடையே நெடுங்காலமாகவே இருந்து வந்த, கலையின் அடிப்படையிலான எதிரிடை நிலையினால் இருகலைகளுமே பெரிதும் வளர்ந்து, அவ்வப்போது இணைந்து, அதன் விளைவாகத் தோற்றம் பெற்ற பதவர்ணங்கள், அரசர்களின் பேராதரவால் தனிச்சிறப்புடன் மிளிர்ந்தன. லயம், இனிமை என்ற இருவித ஜரிகை வேலைப்பாடுகள் பதிக்கப்பெற்ற உயர் ரகச்சீலைகளாகப் பதவர்ணங்கள் ஒளிவீசத் தொடங்கின. பதவர்ணத்தின் உயிரோட்டமான சுவை விப்ரலம்ப சிருங்காரமே தவிர, லயமும், ராக இனிமையும் அதிலே ஸம்போக சிருங்காரத்தைத் துய்ப்பனவாக அமைந்தன. இசையோடு அற்புதமான பாடல்களை படைக்கும் கற்பனைத்திறன் செறிந்த கவிகளாகப், பதவர்ணகர்த்தாக்கள் இருந்தனரென்பதற்கு அதுவே சான்று பகரும். எதுகை மோனைகளுடன் கூடிய

சொல்லாட்சிகள், அந்த வர்ணகர்த்தாக்களின் கட்டளைக்குக் கீழ்ப்படிந்தன. அவர்கள் நினைத்த மாத்திரத்தில் எதிரில் வந்து, மனமாகிற தட்டுக்கழிக்கேற்ப நடமிட்டன. இதோவொரு நாட்டியப் பாடல்.

"ஸலலிதநடு குணமுலு கல இந்திரா-வலராஜு தந்திரா;
செலுவலரின செங்கல்வல தொந்திரா-ரத்னால பந்திரா;
இலனுகல லலனலலோ மேல்பந்திரா-நெம்மேனி காந்திரா;
தெலவிகல மெருபுலோனைதி தந்திரா-ஸொபகைன தொந்திரா....."

இது வீரபத்ரய்யா இயற்றிய பாடல் ஒன்றின் பகுதி. பதஜாலங்களை மிகச்சிறப்புடன் செய்திடச் 'சுந்தர'த் தெலுங்குமொழி வாக்கேயக்காரர்களுக்கு உதவிக்கரம் நீட்டியிருக்கிறது. பிற மொழிகளில் இது, அத்துணைச் சாத்தியமென்று கூறுவதற்கில்லை.

தஞ்சையை ஆண்ட நாயக்கர்கள் தெலுங்கு மொழியினராதலால், நாடெங்கும் வழக்கிலிருந்த அம்மொழிஂயை வாக்கேயக்காரர்களும் ஸஹஜமாக உபயோகப்படுத்தினர். ரகுநாத நாயக்கர், அவருடைய குமாரரான விஜயராகவ நாயக்கர் ஆகியோரின் ஆட்சிக் காலத்தில் ஆடற்கலை உன்னதமான ஸ்தானத்தைப் பெற்றிருந்தது. ஆட்சிமொழியான தெலுங்கு, மக்களின் வழங்கு மொழியாகவுமிருந்ததில் வியப்பில்லை. ஆனால், அவர்களை அடுத்து ஆட்சிக்கு வந்த மராட்டியர்களும், தெலுங்கு மொழி தன்னுள்ளே கொண்டிருந்த பேராற்றலை அறிந்துணர்ந்து, அதனைச் செழிப்புடன் வளர்த்தனர் என்பதே வியக்கவும், போற்றவும் தக்கதோர் செய்தி. அதுகாறும் ஆட்சி மொழியாகவிருந்த தெலுங்கு பதவியிழக்கவில்லை; மாறாக மராட்டியுடன் கை குலுக்கி நின்றது. மன்னர்கள் அனைவரும் தெலுங்கைக் கட்டாயப் பாடமாக்கித் தாமும் கற்றனர்; விரைவில் தேர்ந்தனர். போற்றுதலுக்குரிய மராட்டிய மன்னர் ஷாஹ்ஜீ (1684-1712) புனைந்துள்ள காவியங்கள், பாடல்கள், நாடகங்கள்

ஆகியவற்றில் மிகுதியானவை தெலுங்கு மொழியில்தான் உள்ளன. எனவே தான், மராட்டியரின் ஆட்சி முடிவுற்ற காலம் (1855) வரையிலும், பதவர்ணங்களும், ஸ்வரஜதிகளும், பிற பாடல்களும் தெலுங்கு மொழியிலேயே அமைந்து பரவி நிற்கின்றன.

பதவர்ணங்களின் இசையமைதியானது, அதில் இடம்பெறும் தேகங்களாகிய சொற்களுக்கு உயிரூட்டுபவனவாய் விளங்குகிறது. கர்நாடக இசைக்குரிய கமகங்களும், குழைவுகளும் அழகுற அமைக்கப்பட்டிருப்பினும், பதவர்ணங்களில் மிகுதியான அளவில் கமகங்களுக்கு இடமிராது; ஒரே அடியை வெவ்வேறு பின்னல்களுடன் திரும்பத்திரும்பப் பாடும் 'ஸங்கதி'களும் அதிக அளவில் இருப்பதில்லை. இசையின் போக்கு, அநேகமாக மத்ய ஸ்தாயி முதல் தாரஸ்தாயியின் முதற்பகுதிவரை மட்டுமே பயணம் செய்யும். தவிர்க்க முடியாத நிலைகளில் மட்டுமே மந்த்ர ஸ்தாயியில் சிறிது ஸஞ்சாரமிருக்கும். இசை வன்மையுடையதாக ஒலிக்க வேண்டுமென்பதே, இப்படிப்பட்டதொரு நியதிக்குக் காரணம்.

இவ்விதப் பாடல் வகைகள் இதுகாறும் எவ்வளவு இயற்றப்பட்டிருக்கின்றன, எத்தனை வாக்கேயக்காரர்கள் இப்பொக்கிஷத்தை விட்டுச் சென்றுள்ளனர் என்று கணக்கிடும் முயற்சி தோல்வியை மட்டுமே தரும்.

இந்த நூலில் பலவகைப்பட்ட பாடல்கள் இருந்த போதிலும் வர்ணங்களே மிகுந்து காணப்படுகின்றன. அவை வருமாறு:-

வர்ணங்கள் - 24 (தான வர்ணங்கள் 2, பதவர்ணங்கள் 22)

ஸ்வரஜதிகள் - 7

தரு - 1

மகுடுஸ்வரம் -1

ஸல்லாம் தரு -1

ஜயதேவரின் 'கீதகோவிந்த்'த்தின் அஷ்டபதிகள் - 2

இவற்றில், தெலுங்கு மொழியிலிருப்பவை 28; மராட்டியில் 5; தமிழில் ஒன்று; அஷ்டபதிகள் ஸம்ஸ்கிருதத்தில் அமைந்தவை என்பது அனைவரும் அறிந்த விஷயம். இப்பாடல்களில் போற்றப்பெறும் தலைவர்கள்:-

| | | |
|---|---|---|
| 1 | இறை-அச்யுதவரதர் | - 8 |
| 2 | இறை-உன்னத புரீசர் | - 3 |
| 3. | இறை -பரிமளரங்கர் | - 1 |
| 4. | இறை–முத்துக்குமாரஸ்வாமி | - 1 |
| 5. | ராஜகோபால | - 1 |

அரசர்களும், பிரபுக்களும்:-

| | | |
|---|---|---|
| 1 | அரசர் சரபோஜி | - 6 |
| 2 | அரசர் சிவாஜி | - 6 |
| 3 | அரசர் கிருஷ்ணராஜ உடையார் | - 1 |
| 4 | அரசர் ராம வர்மா | - 1 |
| 5 | பிரபு வெங்கடராயர் | - 1 |
| 6 | பிரபு பிக்காஜி ராயர் | - 1 |
| 7 | பிரபு சிவசிதம்பரர் | - 1 |
| 8 | பிரபு யுவரங்க பூபதி | - 1 |
| 9 | பிரபு மல்லார்ஜி | - 1 |
| 10 | பிரபு பரசுராமர் | - 1 |

வழக்கமாக நாம் சந்திக்கின்ற இடர்ப்பாடு, பாடல்களைப் புனைந்தவர்களோ, அவற்றைப் பிரதியெடுத்தவர்களோ, குறிப்பிட்ட பாடலை இயற்றியவர் யார்என்று குறித்து வைக்காமற்போனமையே. தம் பெயரைப் பதிவு செய்து வைக்கப் பலர் விரும்பாமலிருந்ததும் இதற்கொரு காரணம். இதனால், நமக்கு வசதிப்படும் அணுகுமுறைகளின் மூலமாக, மந்த நடைபோட வேண்டியதாகி விடுகின்றது. இந்நாளைப் போல், பாடல்களை ஸ்வரக் குறிப்புடன் எழுதி வைப்பதோ, பதிப்பித்து வெளியிடுவதோ .முன்னாளில் இருந்த வாக்கேயக்காரர்களால் செய்யமுடியாமற் போய்விட்டது; பல்வேறு வெளியீட்டுக்குதவும் ஸாதனங்களும், வசதிகளும் அப்போது கிடையாது. அச்சில் வெளியான நூல்களிலோ, அபத்தங்களுக்கும் குறைவில்லை; சிதறிக் கிடந்து நம்மிடம் வந்து சேரும் செய்திகள் யாவுமே ஆதாரத்துடன் கூடியவையெனக் கூறமுடிவதில்லை.

. பொதுவாக, இசைப்பாடல்கள் அனைத்திலுமே, அவற்றை இயற்றியவரை நாம் அறிய உதவும்படியான சொல்லொன்று அமைந்திருக்கும். இதை 'முத்திரை' அல்லது 'அங்கிதம்' என்பார்கள். இது பலவகைப் பட்டது. சிலவற்றை இங்கு காண்போம்.

1.. ஸ்வநாம முத்திரை - வாக்கேயக்காரர் தன் பெயரையே முழுமையாகவோ, சுருக்க மாக வோ கொடுப்பது. தியாகராஜ கிருதிகளில் அமைந்துள்ள 'த்யாகராஜ' என்ற சொல்லை உதாரணமாகக் கூறலாம்.

2. ஸ்தல முத்திரை - தன் சொந்த ஊர் அல்லது தன் இஷ்ட தெய்வம் உறையும் ஊர் போன்று ஒரு ஊரின் பெயரைக் கொடுத்தல்.உ-ம் ஹரிகேசநல்லூர்

டாக்டர் முத்தய்யா பாகவதரின் 'ஹரிகேச' முத்திரை

3. தேவதா முத்திரை - ஏதேனுமொரு இறையின் பெயரைப் பதித்தல். உ-ம் 'அச்யுதவரத' - வீரபத்ரய்யா

4. ராஜ முத்திரை - தன்னை ஆதரிக்கும் அரசர் அல்லது போஷகரின் பெயரைத் தருதல். உ-ம் தஞ்சை சின்னையாவின் 'க்ருஷ்ண ராஜேந்த்ர' முத்திரை.

5. இதர நாம முத்திரை - ஏதோவொரு பெயரைச் சேர்த்தல்

இவ்விதமான முத்திரைகள், பாடலை இயற்றியவரை நாம் அறிந்து கொள்ள உதவுகின்றன என்பது பொதுவாக நிலவுகின்ற கருத்தாகும். ஆயினும், நமது முயற்சிக்கு அவை உண்மையாகவே உதவுகின்றனவா என்பதை முதலில் நாம் அறிந்திட வேண்டிய கடமையிருக்கின்றது. முன்பிருந்த ஏராளமான வாக்கேயக்காரர்களைப் பற்றி, இசை மாணவர்கள், ஏன் இசைக் கலைஞர்களும் தெரிந்து கொள்ள வேண்டியது அவசியம். வாக்கேயக்காரர்களின் வாழ்க்கை குறிப்புகளைத் தொகுத்து வெளிவந்த நூல்களும், ஆய்வறிஞர்தம் கட்டுரைகளும் உதவிக்கு நாடப்படுவது இயற்கை. உண்மையை நாம் கண்டறிய அவர்களின் நூல்களும், கட்டுரைகளும் நமக்கு உதவ வேண்டுமேதவிர, நம்மைக் குழப்புவதாயிருக்கக் கூடாது. ஆதாரபூர்வமானவை யென்று பலரால் கருதப்படும் நூல்களில் ஸுப்பராம தீக்ஷிதர் எழுதிய 'ஸங்கீத ஸம்ப்ரதாய ப்ரதர்சினீ' யும் தச்சூர் சிங்கராச்சார்லுவின் 'காயக ஸித்தாஞ்ஜன'மும் குறிப்பிடத்தக்க இரண்டாகும். வாக்கேயக்காரர்களைப் பற்றிய செய்திகள் இவற்றில் மலிந்து கிடப்பினும், வலிந்து யூகிக்கப்பட்ட செய்திகளுக்கும் குறைவில்லை. இக்குறைபாடு

நூலாசிரியர்களின் குற்றமெனக் கூறிவிடமுடியாது. ஏனெனில், அவர்கள் கொடுத்துள்ள செய்திகளிற்பல, செவி வழியாக அவர்களை அடைந்தவைதாம்.

மூலகநாடு வகுப்பைச் சேர்ந்த தெலுங்கு அந்தணராகிய வீரபத்ரய்யா தஞ்சை மன்னன் பிரதாபஸிம்ஹனின் புலமை பற்றியும், ஈகைத் தன்மை பற்றியும் கேள்வியுற்று, வடநாட்டிலிருந்து தஞ்சைக்குவந்து, அவ்வரசனின் அவையில் தங்கிப் பலவகைப்பட்ட பாடல்களை, மராட்டிய மன்னர்களின் குலதெய்வமாகிய பிரதாபராமனின் பெயரைத், தம் முத்திரையாக்கிப் படைத்தார் என்றும், இவரது படைப்புகளில் ஸ்வரஜதிகள், தில்லானாக்கள் மற்றும் பல உள்ளனவென்றும் சுப்பராம தீக்ஷிதர் எழுதியிருக்கிறார். வடநாடு என்பது எந்தப் பகுதியைக் குறிக்கிறதென்பது விளக்கப்படவில்லை. தெலுங்கரானபடியால் ஆந்திரத்திலிருந்து தஞ்சைக்கு வந்தவர் வீரபத்ரய்யா என்று யூகிக்கலாம். அதேசமயம், அவர் கர்நாடகத்திலிருந்து வந்தாரெனக் கொள்ளவும் இடமுண்டு; அவருடைய பெயரைக் கொண்டு அவர் கர்நாடகத்தவர் எனக் கொள்ளக்கூடும். மேலும், கன்னட நாட்டினர், சோழ தேசத்தைக் (குறிப்பாகத் தஞ்சைத் தரணியை) இன்றளவிலும் 'தக்ஷிணாதி' எனக் குறிப்பிடும் வழக்கமிருந்து வருகிறது.

மன்னன் பிரதாபஸிம்ஹன் (1739-1763) வீரபத்ரய்யாவை அழைத்து வந்து, அவருக்குத் தேவையான வசதிகளையெல்லாம் அளித்தான். தஞ்சையில் நிலைப்பட்டிருந்த வீரபத்ரய்யாவைச் சிலர் 'மெலட்டூர் வீரபத்ரய்யா' என்று குறிப்பிட, மெலட்டூருக்கும் அவருக்கும் என்ன தொடர்பு என்பதோ, 'அச்யுத வரத' என்ற முத்திரையை அவர் ஏன் கையாண்டாரென்பதோ அறிய முடியாதவையாயிருக்கின்றன. அவரால் தருக்களும், ஸ்வரஜதிகளும், தில்லானாக்களும் இயற்றப்பட்டனவென்று எழுதிய சுப்பராமதீக்ஷிதர், மாதிரிக்கொரு தில்லானாவை ஏனோ

கொடுக்காமல் விட்டுவிட்டார். வீரபத்ரய்யாவின் தில்லானாக்கள் சுவடிகளில் உறங்கிக் கொண்டிருக்கின்றன. வேறொரு இடத்தில், வீரபத்ரய்யா, இரண்டாம் சரபோஜியின் காலத்திலும் (1798-1832) சிவாஜியின் காலத்திலும் (1832-1855) வாழ்ந்தவரென முன்னுக்குப்பின் முரணாகத் தீக்ஷிதர் குறிப்பிட்டுள்ளார். அச்யுதவரத, முதந்தீச, உன்னதபுரீச ப்ரதாபராம என்ற நான்கு முத்திரைகளை வீரபத்ரய்யா கையாண்டிருக்கிறார் என்று, டாக்டர் எஸ்.ஸீதா, தன் கட்டுரையொன்றில் தெரிவித்துள்ளார்.

"பரத காசிநாதுனி க்ருபசேதனு தரனுவெலயு ராமநாத
ஸோதருலு பஞ்சநதி வைத்ய நாதய்ய வருலகுனபீஷ்ட வரமுல
நொஸங்கின....மெலடூரி உன்னத புரீச ஸ்வாமீ...."

என்று ஒரு ஸல்லாம்தரு இருக்கிறது. இதிலே 'உன்னதபுரீச' என்ற சொல், வேறொருவரால் கையாளப் பட்டிருக்கிறது. பரதம் காசிநாதருக்கு (1690-1764) முதல் வணக்கம் செய்யப்படுவதாக இதனைக் காண்கிறோம். ஆயினும், 'நின்னுகோரிரா' என்ற ராகமாலிகை வர்ணத்தில் (இந்நூலில் இடம் பெற்றுள்ளது), 'உன்னதபுரீச' 'முதந்தீச' எனும் இரு சொற்களையுமே முத்திரையாகத் தரப்பட்டுள்ளது. வீரபத்ரய்யாவின் முத்திரை 'அச்யுத வரத' என்ற கருத்து ஏற்புக்குரியதேயாயினும், இதை வேறு வாக்கேயக்காரரும் மேற்கொண்டிருக்க இடமுண்டு. காரணம், ஒருசிலர் நீங்கலாக மற்றெந்த வாக்கேயக்காரருமே, ஒரே முத்திரையை உபயோகிக்கும் வழக்கமுள்ளவராகக் காணப்படவில்லை

வீரபத்ரய்யாவின் பாடற்படைப்புகளைப் பற்றிக் கூறும், தனித்தனிக் கட்டுரைகளில், டி.ஜி அனந்த சுப்பிரமணியன், டாக்டர் எஸ்.ஸீதா இருவரும் பரஜு ராகத்திலமைந்த பாடல் ஒன்றினையும் குறிப்பிட்டுள்ளனர். அநேகமாக முத்திரையென்று கருதப்படுமளவில், இப்பாடலில் உள்ள 'ஜப்யேச்வர ரமணீ' என்ற சொல், திருவையாற்றிலே உறையும் இறைவியின் திருநாமம்

ஆதலால், இது வீரபத்ரய்யாவுடையதென்ற செய்தி ஒதுக்கித் தள்ளப்பபடுவதாகிறது.

அச்சிலே வெளியான முதல் இசை நூல்களில் முக்கியமாக விளங்கும் 'ஸங்கீத ஸர்வார்த்த ஸாரஸங்க்ரஹமு' என்ற நூல், வீரபத்ரய்யாவின் பெயரில் பல ஸ்வரஜதிகளைக் கொடுத்துள்ளது. அவற்றிலொன்று மோஹன ராகத்திலமைந்த 'ஸாமி தயஜூட' என்பது. முத்திரையெனக் கொள்ளத் தக்கவாறு, இதில் வரும் வரியொன்று "பூமிவெலஸின கரிவரத...." எனப் போகின்றது. காஞ்சீபுரத்திலிருந்து மெலட்டூருக்கு வரதராஜரின் விக்ரஹத்தோடு சில குடும்பங்கள் வந்து குடியேறியதாகவும், அதற்கென வெகு காலம் கழித்துக் கோவில் எழுப்பப் பட்டதாகவும் சிலர் கூறுகின்றனர். தவிர, அந்தக் குடும்பங்களில் ஒன்றைச் சேர்ந்த வீரபத்ரய்யா, 'கரிவரத' எனும் முத்திரையைக் கையாண்டார் என்றும் வாதிக்கப்படுகிறது. அப்படியெனில், அவர் 'அச்யுதவரத' என்ற முத்திரையை ஏன் உபயோகித்தார்? மேலும், 'கரிவரத' எனும் முத்திரையைத் தாங்கிய பதங்கள் பல சுவடிகளில் காணக் கிடைக்கின்றன. பதப்பிரயோகம், பாடல் அமைப்பின் தன்மை இவற்றைப் பரிசீலிக்கும்போது, இவை, வீரபத்ரய்யாவின் கவனங்களாக நாம் ஏற்கும் பாடல்களினின்றும் முற்றிலும் மாறுபட்டிருப்பதை அறியலாம். 'ஸங்கீத ஸர்வார்த்த ஸார ஸங்க்ரஹ'மே, சுமார் எட்டுப் பதங்களை, வீரபத்ரய்யா இயற்றியதாக வரிசைப்படுத்துகின்றது. அவற்றிலுள்ள முத்திரைகளோடு, அப்பதங்கள் கீழே கொடுக்கப்படுகின்றன.

| | | |
|---|---|---|
| அக்கரோ | - தர்பார் | - வரத வெங்கடேஸ்வருனி |
| லலனா | - ஜஞ்ஜூடி | - வரத வெங்கடேஸ்வருனி |
| அலெல்ல ஹலெல்ல | - நாதராமக்ரிய | - க்ருஷ்ண |
| அலிகி கூடி | - நீலாம்பரி | - க்ருஷ்ண |
| தானி நன்னெட | - ஆனந்தபைரவீ | - வெங்கடரமண |
| தருணிநின்னு | - மணிரங்கு | - ப்ருஹன்னாயக |

| | | |
|---|---|---|
| செயிபட்டி | - சஹான | - யுவரங்க |
| வென்னெல தீரிதே | - பைரவீ | - யுவரங்க |

ஸரஸ்வதி மஹால் சுவடிகளிலும், 'வரத வெங்கடேஸ்வருனி' என்ற முத்திரைகளோடு பல பதங்கள் இருக்கின்றன. இவற்றிலெல்லாம் (முன் பட்டியில் உள்ளவையும்), வீரபத்ரய்யாவின் படைப்புக்கள் என்று கூறத்தக்கவாறு எதுவுமேயில்லை. இவ்வாறு கூறுவதற்கான காரணங்களைப் பிறிதோர் இடத்தில் காணலாம்.

பிரதாபஸிம்ஹ அல்லது ப்ரதாபராம என்ற முத்திரையோடு பல ஸ்வரஜதிகளும், பாடல்களும், ஸரஸ்வதி மஹால் நூல் நிலையத்துச் சுவடிகளில் நிரம்பியுள்ளன. அவற்றில் சில பின்வருமாறு.

| | | |
|---|---|---|
| வகலெல்ல நே கண்டிரா | - கன்னட | - ப்ரதாபஸிம்ஹ |
| முனுவைன | - காம்போஜி | - ப்ரதாபஸிம்ஹ |
| ஹாநேனேமி | - ஆனந்தபைரவீ | - ப்ரதாபஸிம்ஹ |
| நீவேநாதைவமனி | - உசானீ | - ப்ரதாபராம |
| பாஸ ரமுக | - | - ப்ரதாபராம |
| இந்த ஓர்வ | - | - ப்ரதாபராம |

இவை வீரபத்ரய்யாவுடையனவே என்று நாம் கூறலாமெனினும், ஆணித்தரமாக உறுதி செய்யவியலாது.

நாராயண தீர்த்தரால் இயற்றப்பெற்றதெனப்படும் 'பாரிஜாதாபஹரணம்' (சென்னை, ஸங்கீத வித்வத்ஸபையின் ஸஞ்சிகை-தொகுதி 13-1942 பார்க்கவும்) என்ற நூலின் இறுதியில் பின்வரும் சுலோகம் காணப்படுகின்றது.

"சரணம் சரணம் முனீந்த்ரஸன்னுத சரணம் கமலாநாயகா|

சரணம் அச்யுதபுரநிவாஸ ஸ்வாமீ வரத ராஜ ப்ரபோ||"

நாராயணதீர்த்தரும் 'அச்யுதபுர வரத' எனும் முத்திரையைக் கையாண்டிருப்பதை இது தெரிவிக்கும்.

தஞ்சை மராட்டிய மன்னர்களின் குலதெய்வம், ஸுப்பராம தீக்ஷிதர் கூறியிருக்கும் விதத்தில், பிரதாபராமர் அல்ல. மன்னர் ஷாஹ்ஜீ, அவருடைய ஸஹோதரர்களான முதலாம் சரபோஜி, முதலாம் துளஜா எல்லோருமே சைவர்கள்; திருவாரூர்த் தியாகேசப்பெருமானின் ஆழ்ந்த பக்தர்கள். தன் பாடற்படைப்புகள் அனைத்திலுமே, ஷாஹ்ஜி 'த்யாகேச' என்ற அங்கிதத்தையே உபயோகித்துள்ளார். ஸமர்த்த ராமதாஸரின் சீடர் வழிவந்த மன்னார்குடி ஸேதுபாவா ஸ்வாமிகள் ராமபக்தர். அவர் மூலமாகத் 'தாரக மந்திர' உபதேசம் பெற்ற பிரதாபஸிம்ஹன், அதன் பின்பே ராமபக்தன் ஆனார். பிறகுவந்த மன்னர்கள் யாவரும் தீவிர வைணவரோ, சைவரோ அல்லாது இருப்பினும், பிரதாபஸிம்ஹன் உருவாக்கிய 'ராம் ப்ரதாப்' என்ற எழுத்துக்களைக் கொண்ட அரச இலச்சினையை மட்டும் மாற்றவில்லை.

வீணை ராமகாளஹஸ்தி சாஸ்திரியின் சீடர் வீரபத்ரய்யா எனும் செய்தியைக் 'காயக ஸித்தாஞ்ஜனம்' கொடுக்கிறது. இரண்டாம் துளஜா மன்னரின் அவையிலிருந்த இசைப்புலவரான ராமகாளஹஸ்தி சாஸ்திரிக்கு ('அய்யா'வுக்கு) 1771ஆம் ஆண்டில், பேரணூர் கிராமத்தை அரசன் ஸர்வமானியமாக அளித்திருக்கிறார். மகனின் அவையில் குருவும், தந்தையின் அவையில் சீடரும், இசைவாணராகப் பணிபுரிந்தனர் எனக் கூறுவது பொருத்தமாக இல்லை. வீரபத்ரய்யாவுக்கே துளஜா மன்னர் 1776ஆம் ஆண்டில் ஸர்வமானியம் அளித்த செய்தியை மோடி ஆவணங்கள் குறிப்பிடுகின்றன. தஞ்சையில் (அல்லது மெலட்டூரில்) வாழ்ந்த வீரபத்ரய்யா, பிரதாபஸிம்ஹன் காலத்திலும், பின்பு இரண்டாம் துளஜா காலத்திலும் இருந்தவர் என்பதை இப்போதைக்கு ஏற்றுக் கொள்வோம். ராமஸ்வாமி தீக்ஷிதர் (1735-15.2.1817) வீரபத்ரய்யாவின்

சீடராயிருந்திருத்தல் கூடும்; ராமஸ்வாமி தீக்ஷிதரும், பச்சிமிரியம் ஆதியப்பய்யாவும் சமகாலத்தவர்கள்.

'விரிபோணி' வர்ணத்தால் புகழ்பெற்ற ஆதியப்பய்யா என்பவர், புதுக்கோட்டை ஸமஸ்தானத்து இசைக்கலைஞர் என்று 'காயக ஸித்தாஞ்ஜனம்' தெரிவிக்கிறது. சியாமா சாஸ்திரிகள், பல்லவிகோபாலய்யர், 'கனம்' கிருஷ்ணையர், 'பூலோக கந்தர்வ' தஞ்சை நாராயணஸ்வாமி அய்யர் முதலானோர் ஆதியப்பய்யாவின் சீடர்கள் எனப்படும். இவர் தஞ்சாவூரில் பலகாலம் வாழ்ந்திருந்து, பின்னர் புதுக்கோட்டைக்குச் சென்றார் என யூகிக்கலாம். பிரதாபஸிம்ஹனின் காலத்தவராகப் பேசப்படும், இவரும், வீரபத்ரய்யாவும் ஸமகால்த்தவர்கள் என ஸுப்பராம தீக்ஷிதர் கூறுகிறார். இரண்டாம் துளஜாவின் காலத்திலும் இவர் இருந்தாரென்ற கருத்தை டாக்டர் வே.ராகவன் கொடுத்துள்ளார். ஆதியப்பய்யாவின் பைரவீராக வர்ணத்தில் 'தக்ஷிண'த்வாரக ஸ்வாமி ராஜகோபால என்ற முத்திரையுள்ளது. 'மதவதீ' எனத் தொடங்கும் பந்துவராளி ராகவர்ணம் இவருடையதாகச், சென்னை ஸங்கீத வித்வத்ஸபை வெளியிட்டுள்ளது. ஆதியப்பய்யா இவ்விரு வர்ணங்களை மட்டுமே இயற்றினாரெனக் கூற முடியாது; ஆயினும் வேறு பாடல்கள் இதுவரை கிடைக்கவில்லை.

மெலட்டூர் வெங்கடராம 'சாஸ்திரி' ('அய்யா' என்பதே பொருந்தும்) என்பவர் இன்னொரு சிறந்த வாக்கேயக்காரர் ஆவார். மெலட்டூரில், கோபாலகிருஷ்ணய்யா என்பவரின் குமாரராகப் பிறந்து, லக்ஷ்மணார்யர் என்பவரின் சீடராக ஆனவர் என்று வெங்கடராமய்யாவைப் பற்றி எழுதப்பட்டுள்ளது. லக்ஷ்மணார்யர் என்பவர் இவருடைய குருவா அல்லது பாட்டனாரா என்றொரு ஐயப்பாடும் எழுகின்றது. இதற்குரிய காரணங்கள் உள்ளன. பரம்பரையைக் குறிப்பிடுகையில் குருவின் கோத்ரத்தைக் குறிப்பிடுவது மரபு அல்ல. வெங்கடராமய்யாவின் 'ப்ரஹ்லாத

சரித்திர'த்தின் தொடக்கத்தில், "ஸ்ரீவத்ஸ கோத்ர திலகுலௌ லக்ஷ்மணார்ய க்ருபாவல்ல கோபாலக்ருஷ்ணார்ய குமருடௌனட்டி....." என்று வருகிறது. இதனை, "ஸ்ரீவத்ஸ கோத்ரத்து கோபாலகிருஷ்ணார்யரின் குமாரரும், லக்ஷ்மணார்யரின் சீடருமான வெங்கடராம சாஸ்திரி" என விளக்கம் செய்கிறார், டாக்டர் வே.ராகவன். இது சிறிது ஆழ்ந்து சிந்திக்கப்பட வேண்டிய விஷயம்.

'பாகவத மேள நாட்டிய நாடகக் கலையின் தந்தை'யென்று வெங்கடராமய்யா போற்றப்படுகிறார். நாயக்க மன்னர்களின் காலத்தில் இவ்வித நாடகங்கள் பிரபலமடைந்திருந்தன. தஞ்சை அரண்மனையிலும், சுற்றியுள்ள சில ஆலயங்களிலும் இவை நிகழ்த்தப்பட்டு வந்தனவென்பதை மோடி ஆவணங்களும் தெரிவிக்கின்றன. நாராயணதீர்த்தரின் 'க்ருஷ்ணலீலா தரங்கிணி' தான், மெலட்டூரில் முதன்முதலாக நடிக்கப்பட்ட நாட்டிய நாடகம் என்பது சிலர் கருத்து. சிலகாலம் நடைபெறாது தடைப்பட்டிருந்த இந்நிகழ்ச்சிகளுக்குப் புத்துயிர் தந்து, அதன் பொருட்டுப் பல நாட்டிய-நாடகங்களைத் தாமே இயற்றிய பெருமை வெங்கடராமய்யாவையே சாரும்.

'ஏமந்தயானரா' எனும் ஹுஸேனிராக ஸ்வரஜதியைக் கொடுத்து, அதற்கு அடிக்குறிப்பிட்டு "இந்த ஸாஹித்யத்தை வெங்கடராம சாஸ்திரி இயற்றினார்" என்றும், அதற்கு இசை வகுத்தவர், ஆதியப்பய்யா என்றும் ஸுப்பராம தீக்ஷிதர் எழுதியுள்ளார். வெங்கடராமய்யா வெறும் பாடலாசிரியர் அல்ல; வாக்கேயக்காரர். அப்படியிருக்க, அவருடைய பாடல்வரிகளுக்கு இன்னொருவர் இசையமைக்கக் காரணமென்ன என்பது புரியவில்லை. அவரும் ஆதியப்பய்யாவும் அத்தனை இணைபிரியா நண்பர்களா? தாமே வலிந்து முன்வந்து இசையமைத்துத் தருவதாக ஆதியப்பய்யா கேட்டுக் கொண்டாரா? விடை பகர்வது எளிதன்று. டாக்டர்

வே.ராகவனைப் பின்பற்றி டாக்டர் எஸ்.ஸீதாவும் 'ஏமாயலாடிரா' என்ற ஸ்வரஜதி வெங்கராமய்யாவினால் இயற்றப்பெற்றதென எழுதியுள்ளார் ('ஹிந்து'-4.10.1970) இது சரியோ, தவறோ; வெங்கடராமய்யா நல்லதொரு வாக்கேயக்காரர் என்பது மறுக்கவியலாதது. இரண்டாம் சரபோஜி (1798-1832), சிவாஜி (1832-1855) இருவரின் காலத்திலும் வாழ்ந்தவர் என்று ஸுப்பராம தீக்ஷிதர் குறித்துள்ளதைக் கொண்டு ·பார்த்தால், வெங்கடராமய்யாவும், பிரதாபஸிம்ஹனின் காலத்தவரான ஆதியப்பய்யாவும் இணைந்து 'ஏமந்தயானரா' ஸ்வரஜதியை இயற்றினார் என்று, அதேஸுப்பராம தீக்ஷிதர் கூறுவது முரண்பாடுடைய செய்தியாகவே ஆகிறது.

ஹுஸேனி ஸ்வரஜதியைப் பற்றித்தன் கட்டுரை யொன்றில் "இந்த ஸ்வரஜதியின் மரபு திருவாரூரில், ஞானத்திடமிருந்து கமலத்துக்கும், கமலத்திடமிருந்து வெங்கடராம சாஸ்திரிக்குமாகப் பின்னோக்கிச் செல்வதையும், கமலத்துக்கு இந்த ஸ்வரஜதியை சாஸ்திரியே கற்பித்தார் என்றும் கூறக்கேட்டிருக்கிறேன், "என டாக்டர் ராகவன் எழுதியுள்ளார். நாட்டியத்தில் வல்லவரான கமலம் எனும் அம்மையார், இசையைப் பயின்றது, முத்துஸ்வாமி தீக்ஷிதரிடத்தில்தான். தஞ்சை நால்வர், நாட்டியக் கலையில் அடிவைத்தபோது, ஆடலின் பொருட்டுக் கமலத்தின் ஸேவைதனையே பயன்படுத்திக் கொண்டனர். வெங்கடராமய்யாவுக்கு மிகவும் இளையவர்கள், இச்சகோதரர்கள். 'சாஸ்திரி'யே கமலத்துக்குக் கற்பித்தார் என்றால், கற்பிப்பவருக்கு ஆட்டக்கலையில் நிறைந்த புலமை இருந்திருக்கும்; இல்லையேல், நாட்டிய-நாடகங்களை இயற்றவுமியலாது. தன் ஸ்வரஜதியை ஆடி அரங்கேற்ற மெலட்டூரில் தன்னிடம் நாட்டிய-நாடகப் பயிற்சி பெற்ற ஒரு பையனை வெங்கடராமய்யா பயன்படுத்தியிருக்கலாம். திருவாரூரில் இருக்கும் கமலத்தை ஏன் அவர் தேர்ந்தெடுத்தார்? தஞ்சையிலோ அல்லது அருகாமையிலோ வேறு ஆடல்மகளிர்

இல்லாதிருந்தனரா? நாட்டியக் கலையைப் பயிற்றுவிப்பவருக்கு இசையும் கட்டாயமாகத் தெரிந்திருக்குமே; எனில், அவருடைய ஸ்வரஜதி வரிகளை ஆதியப்பய்யா ஏன் இசைப்படுத்த வேண்டும்? ஆதாரபூர்வமான செய்திகள் கிடைத்தாலன்றி இவ்வினாக்களுக்கு விடையிறுப்பது மிகவும் கடினம்.

காலஞ்சென்ற 'நாட்ய கலாநிதி' பந்தணைநல்லூர் மீனாக்ஷிசுந்தரம் பிள்ளை 'ஏமந்தயானரா' ஸ்வரஜதியைப் பற்றி என்னிடம் விளக்கிக் கொண்டிருந்தபோது, அதனைத் தன்முன்னோர் (தஞ்சை நால்வருக்கும் முன்னோர்) ஆகியவொருவர் இயற்றினாரென்றும், கமலமும், தஞ்சை நால்வரும் தீக்ஷிதரின் சீடர்களானபடியால், கமலத்துக்குத்தான் முதன்முதலாக இந்த ஸ்வரஜதியை 'நால்வர்' பயிற்றுவித்தனர் எனக் கூறினார். கமலம், மூவாநல்லூர் ஸபாபதய்யா என்பவரின் சிஷ்யை என்று டாக்டர் எஸ்.ஸீதா எழுதியிருக்கிறார் ('ஹிந்து'- 20.9.1970). இது ஆதாரமற்றவொரு செய்தி. ஸ்வரஜதியின் மரபு 'ஞானத்திடமிருந்து கமலத்துக்கு' என்ற டாக்டர் வே.ராகவனின் தகவல் ஏற்புடையதல்ல. நாட்யவிதுஷி திருவாரூர் ஞானத்தின் காலம் 1857-1922 ஆகும். அவர், கமலத்தம்மாளைவிடச் சுமார் நாற்பத்தியைந்து வருடங்கள் இளையவர்.

வீரபத்ரய்யாவின் பழமையான ஹுஸேனிராக ஸ்வரஜதி மிகவும் நீண்டிருப்பதன் காரணமாக, அதன் அடிச்சுவட்டில் 'ஏமந்தயானரா' என்ற ஸ்வரஜதியை வெங்கடராம 'சாஸ்திரி' இயற்றினார் எனப்படுகிறது. மங்களகைசிகி ராகத்தில் வீரபத்ரய்யா இயற்றிய தருவொன்று உள்ளது; இதுவும் பத்து சரணங்களைக் கொண்டதாக மிகவும் நீண்டமைந்துள்ளது. 'அச்யுதவரத', 'ப்ரதாபராம' போன்ற முத்திரையை இதில் காணமுடியவில்லை; எனினும், பதப்பிரயோகங்கள், பாடல் அமைந்த தனித்தன்மை ஆகியவற்றைக் கூர்ந்து கவனிக்கையில், இது, வீரபத்ரய்யாவுடையதே என நிச்சயமாக முடிவு செய்யவியலும்.

இதே தருவை 'ஸங்கீத ஸர்வார்த்த ஸாரஸங்க்ரஹ'த்திலும் 'மெலட்டூர் வெங்கடராம சாஸ்திரி' இயற்றியதாகக் காண்கின்றோம். ஆனால், ஒருசில தொடக்கவரிகளை மட்டும் அவ்வாறே வைத்துக் கொண்டு, மற்றவற்றை மாற்றிக் கொடுத்துள்ளார், அதனை இயற்றியவர். இதிலேயும் ஒரு ஆச்சரியமான விஷயமிருக்கிறது. பாடலின் இறுதிவரிகளில், "அகணித நிருபமலீலா தந்திராஜ வரதா ராத்ரி சரதா வாகீச்வராத ப்ரஜாகாந்த யோகிவர சிந்தனீய வேதாந்த கோஸலபுர நிலயா பாஹி கோபவேஷா",

என்று வருகிறது. 'தந்திராஜ' என்றாலும் 'கரிராஜ' என்றாலும் ஒன்றே. 'கரிராஜவரத' (அல்லது 'கரிவரத') என்பதுபற்றி முன்னரே குறிப்பிடப் பட்டது. ஆனால், அடுத்த வரியில் 'கோஸலபுர' என்றிருக்கிறது. இது பதினேழாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தவரான 'மார்க்கதர்சி' சேஷய்யங்கார் எனும் வாக்கேயக்காரரின் முத்திரையாகும். ஆனாலும், அவர் தெலுங்கிலே பாடல்கள் ஏதும் புனைந்துள்ளாரா என்பது கேள்விக் குரியதாக உள்ளது. இதே சேஷய்யங்காரின் 'வந்தே கோவிந்தராஜம்' (சங்கராபரணம்) என்ற கிருதியில் 'தந்திராஜ', 'கோஸல' என்ற இரு சொற்களுமே காணப்படுகின்றன.

வெங்கடராம சாஸ்திரி இயற்றியதாகக் 'கன்னதல்லி' என்ற ஆனந்த பைரவி ராகக் கீர்த்தனையொன்றை 'ஸங்கீத ஸம்ப்ரதாய ப்ரதர்சினீ'யில் காண்கிறோம். இதன் அனுபல்லவி,

"சென்னுக தக்ஷிணகாசி ஸ்வயம்பு காமினீ"

என்ற வரியைக் கொண்டுள்ளது. 'தக்ஷிணகாசி' என்றவூர் தற்காலத்தில் குழிக்கரை எனப்படுகிறது; இது, திருவாரூருக்கு அருகாமையில் உள்ள சிற்றூர். பரதம் நடேசய்யரின் செய்திப்படி, தவிர்க்கமுடியாத சில சூழ்நிலைகளின் காரணமாக, வெங்கடராம 'சாஸ்திரி', மெலட்டூரைவிட்டு வெளியேறி, ஊத்துக்காடு என்ற கிராமத்தில் (இங்கேயும் 'பாகவதமேளம்' நிகழ்ந்து வந்தது) சில

மாதங்கள் தங்கியிருந்து, பின்னர், குழிக்கரைக்குச் சென்று அங்கேயே இறுதிவரை வசிக்கலானார். அவ்வூரிலிருந்த தனிகரான வைத்யலிங்க முதலியார் என்பவரின் ஆதரவு, அவருக்குக் கிடைத்தது. ராமஸ்வாமி தீக்ஷிதரும், தன் 'விஸ்வநாதம்' எனும் சதுர்தச ராகமாலிகையில், "வைத்யலிங்க பூபால பாலனம்" என்று இந்தத் தனிகரைக் குறிப்பிட்டுள்ளார். 'கன்னதல்லி' எனும் கீர்த்தனையை, வெங்கடராம 'சாஸ்திரி', குழிக்கரையில் குடியேறிய பின்னர் இயற்றிருக்கக் கூடும்.

'ஸாமிதயஜூட' எனத் தொடங்கும் மோஹனராக ஸ்வரஜதி வீரபத்ரய்யா இயற்றியதென்று 'ஸங்கீத ஸம்ப்ரதாய ப்ரதர்சினீ' கொடுத்துள்ளது.

வழக்கத்திலுள்ள பல வர்ணங்களை எடுத்துக் கொண்டால் கூட, 'முத்திரை'யைக் கொண்டு வாக்கேயக்காரரைக் கண்டறிவது மிகக் கடினமான செயலாகவிருக்கிறது. எனினும், தெரிந்தவொன்றிலிருந்து தான், தெரியாதவொன்றுக்குச் சாதனைப் பயணம் செய்ய வேண்டியிருக்கிறது.

'ஸுப்ரஹ்மண்ய' எனும் முத்திரை, 'பல்லவி' துரைஸ்வாமி அய்யருடையது. உதாரணம் 'நின்னேகோரி' (மோஹனம்), 'ஏராநாபை'(முகாரி), 'ஸரஸிஜமுகிரோ'(ஆரபி). மைசூர் ஆஸ்தான வித்வானாயிருந்த திருவையாறு 'மீசை' ஸுப்ரஹ்மண்ய அய்யரும் 'ஸ்வநாம முத்திரை'யாக அதையே உபயோகித்துள்ளார்.

உ-ம் 'கிலகிஞ்சி' (பேகட), 'நின்னேகோரி' (கேதாரம்), 'ஸாமி இங்க' (கௌள), 'ஸாமி நின்னே' (கல்யாணி). இதேவிதமாக, 'ஸுப்ரஹ்மண்ய' என்பதையே, சிதம்பரம் ஸுப்ரஹ்மண்ய நட்டுவனாரும், தன் வர்ணங்களில் கையாண்டிருக்கிறார்.

உ-ம் பாஹிமாம் பகவதி (நாடகுறிஞ்ஜி)

தியாகராஜரின் சீடரான வீணைகுப்பய்யர், தன் இஷ்ட தேவனாகிய 'வேணுகோபால' என்ற பெயரைப் பல வர்ணங்களில் சேர்த்துள்ளார். உ-ம் இந்த சலமு (பேகட), நெனருஞ்சி (தன்யாஸி), மகுவநின்னே (நாராயண கௌள), வனஜாக்ஷி (ரீதிகௌள). ஆயினும், சில வர்ணங்களில் 'த்யாகேச' எனும் முத்திரையைக் காண்கிறோம். உ-ம் வனஜாக்ஷி (தோடி) அவர் இத்தோடல்லாமல், வேறு சில பெயர்களையும் முத்திரையாக ஆக்கியிருக்கிறார். உதாரணம்.

நின்னேகோரி-சாரங்க-பார்த்தஸாரதி
ஸாரஸாக்ஷி-காம்போஜி-பிக்காஜிராய

குப்பய்யரும், வாலாஜாப்பேட்டை வெங்கடரமண பாகவதருமாக (இவ்விருவருமே தியாகராஜரின் சீடர்கள்) இணைந்து இயற்றிய 'ஸரஸகுரார' எனும் பைரவீராக வர்ணத்திலுள்ள 'வஜீர' எனும் முத்திரை, அநேகமாக, முன் கூறப்பட்ட 'பிக்காஜிராய'ரையே குறிக்கும். இவரைப்பற்றி உரிய இடத்தில் பார்ப்போம். குப்பய்யரின் சங்கராபரண ராக வர்ணமான 'ஸாமி நின்னே' என்பதை வெவ்வேறு இசை நூல்கள், வெவ்வேறு முத்திரைவரிகளோடு தருகின்றன. அவை, 'தயஜூடரா குமாரா' என்பதும், 'தயஜூட ராஜகோபால' என்பதுமே. இவ்வித மாற்றங்கள் யாரால், ஏன் செய்யப்பட்டன வென்பதைப் புரிந்து கொள்ள முடியவில்லை.

குப்பய்யரின் குமாரரான திருவெற்றியூர் தியாகய்யரும் தானியற்றிய வர்ணங்களில் பலவான முத்திரைகளைக் கையாண்டிருக்கிறார்.

உ-ம் இந்த சௌக-பிலஹரி-வேணுகோபால
கருணிம்ப-சஹான-வேணுகோபால
சலமேல-தர்பார்-வேணுகோபால
ஸாமிதயஜூட-கேதாரகௌள-த்யாகேச

இந்தமோடி-சாரங்க-த்யாகேச
இடுஜாகு--ஸ்ரீத்ரிபுரஸுந்தரீ

அதிருஷ்டவசமாக, இவை ஒவ்வொன்றும் யாரால் இயற்றப்பட்டதென்ற விவரத்துடன், தியாகய்யரே 'பல்லவிஸ்வர கல்பவல்லி' என்ற நூலின் மூலமாக வெளியிட்டுவிட்டார். குப்பய்யரின் சீடரான பிடில்பொன்னு ஸ்வாமி என்பவர் இயற்றிய 'தருணி'யெனும் காம்போஜி ராக வர்ணத்திலும் 'த்யாகேச' என்ற முத்திரையே உள்ளது.

சல்லகாலி வீரராகவய்யரின் குமாரரும், ஆதியப்பய்யாவின் சீடருமான பல்லவி கோபாலய்யரின் பாடற்படைப்புகளில் காணப்பெறும் முத்திரைகள் பின்வருமாறு.

வனஜாக்ஷி-வர்ணம்-கல்யாணி-கஸ்தூரிரங்க
அம்பநாது-கிருதி-தோடி-வெங்கடபதி ஸஹோதரி
ஹரிஸர்வ-கிருதி-காம்போஜி-வரத ஸ்ரீவெங்கடரமண
மஹிஷாஸர-கிருதி-வரதவெங்கடஸஹோதரி

இவரது காம்போஜி ராக வர்ணம் 'இந்த சலமு' (இந்நூலில் கொடுக்கப்பட்டுள்ளது என்பதை அநேகமாக எல்லா இசை நூல்களுமே 'அப்புராய சந்த்ர' எனும் முத்திரையைக் கொண்டதாகவே கொடுத்துள்ளன. இவ்வர்ணம், மைசூர் மன்னர் கிருஷ்ணராஜ உடையார் மீதாக அமைந்தது. பழமையான சுவடியொன்றில், இப்பதம் 'அப்ரராய சந்த்ர' என்றே காணப்படுகின்றது. 'அப்ர' என்றால் 'மேகம்', 'கறுத்த' என்று பொருள். 'க்ருஷ்ண' என்பதைக், கோபாலய்யர், சமத்காரமாக 'அப்ர' எனத்தந்திருக்கிறார். க்ரந்த அக்ஷரங்களில் 'பு' என்பதும் 'ப்ர' என்பதும் ஏறத்தாழ உருவ ஒற்றுமையைக் கொண்டிருப்பதால், 'ப்ர' என்றிருப்பதைப் 'பு' என்று யாரோ பிரதியெடுக்க, அதுவே வழக்கில் நிலைத்து விட்டது போலும்!

'கனகாங்கி' எனத் தொடங்கும் தோடிராக வர்ணம், சிவாஜி மன்னர் மீது பாடப் பெற்றதாகும். இதைப் பல்லவி கோபாலய்யர் இயற்றினாரென்று ஸுப்பராம தீக்ஷிதர் வெளியிட்டிருக்கிறார். ஆயினும் இது உறுதிசெய்ய முடியாததாகும். 'கஸ்தூரிரங்க' எனும் முத்திரையோடு 'ச்ருங்காரா' (பேகட), 'விந்ததானரா' (மத்யமாவதீ), எனும் இரண்டு தருக்கள், ஸரஸ்வதி மஹால் சுவடியொன்றில் கிடைக்கின்றன. 'வரத வெங்கடேச்வர' எனும் முத்திரை, குப்புஸ்வாமய்யா என்பவரின் பாடல்களில்தான் மிகுதியாகக் காண முடிகிறது.

உ-ம் நீகேதய-கல்யாணி-வரத வெங்கடாசலரமண
ராதா நாமீத-ஹமீர்கல்யாணி-வரத வெங்கடேஸ்வர
அனுதினமு-தன்யாஸி-வரத வெங்கடேஸ்வர
எக்கடிகி-பைரவீ-வரத வெங்கடரமண

'அக்கரோ' (தர்பார்), 'லலனா' (ஜஞ்ஜுடி) என்றவிரு பதங்கள் வீரபத்ரய்யாவுடையதாக ஸுப்பராமதீக்ஷிதர் கொடுக்கிறார். இவ்விரண்டிலுமே 'வரத வெங்கடேஸ்வர' என்ற முத்திரையே உள்ளது. ஆனால், இவை குப்புஸ்வாமய்யாவினால் இயற்றப்பட்டவையென்பதே உண்மை.

முத்திரையிடுவதற்கு என்ன சொற்பஞ்சமோ, பல வாக்கேயக்காரர்கள் 'வெங்கடேச' என்ற சொல்லை அதிகமாக உபயோகித்து, நம்மைப் பெருங் குழப்பத்துக்கு ஆளாக்கியிருக்கின்றனர்.

உதாரணத்துக்குச் சில வர்ணங்களைப் பார்ப்போம்.

ஜலஜாக்ஷ - ஹம்ஸத்வனி - மானம்புச்சாவடி வெங்கடஸுப்பய்யா; இங்கா சலமு -சக்ரவாகம் - பட்டணம் சுப்பிரமணிய அய்யர்; பகவாரி-ஹம்ஸத்வனி-பட்டணம் சுப்பிரமணிய அய்யர்; வலசிவச்சி-ராகமாலிகை-கொத்தவாசல் வெங்கடாரம அய்யர்; பலுமாரு-தேவமனோஹரி- கொத்தவாசல்

வெங்கடராம அய்யர்; ஸாமி நின்னே-பந்துவராளி-சேலம் 'ஷட்கால" நரஸய்யா; ஸாமிநீபை-நாகஸ்வராவளி-காளஹஸ்தி வெங்கடஸ்வாமி ராஜு; ஸரஸாங்கி-மாயாமாளவகௌள-ஸாமந்திவாடி ராகவேந்த்ராச்சார்; சலமேல-கீரவாணி-உம்மிடிஸெட்டி வெங்கடஸ்வாமி நாயுடு

இவ்வாறு வரிசைப்படுத்திக் கொண்டே போகலாம். பட்டணம் சுப்பிரமணிய அய்யர் வேறு சில முத்திரைகளையும் உபயோகித்திருக்கிறார்.

ஸாமி நின்னே-அடாண-உக்ரபாண்ட்ய பூபால
ஸாமினி வேக-நாடகுறிஞ்ஜி-கோட்டஸாமி பூபால
எந்துகிந்த-ஸ்ரீ-ஸௌந்தரேஸ்வர

'ஸௌந்தரேஸ்வர' எனும் முத்திரையைத் தஞ்சாவூர் பொன்னையா இயற்றியுள்ள ' எந்த மாயக்காரியோ' (ஹுஸேனீ) ஸ்வரஜதியிலும், 'ஸாமியை அழைத்துவாடி '(கமாஸ்'), 'ஸரஸா' (காபி) போன்ற சில வர்ணங்களிலும் காண்கிறோம்.

இறைவனின் பெயரால் அமையும் 'தேவதா முத்திரை'களை விட 'ராஜ முத்திரை'கள் நம் குழப்பத்தைப் பெருக்குவதாகவே உள்ளன. ஒரு மன்னனின் அவையில் பல வாக்கேயக்காரர்கள் இருப்பது ஸஹஜம். அவர்கள் வைத்திருக்கும் 'ராஜ முத்திரை'யை மட்டும் கொண்டு, எதை, யார் இயற்றினாரென அறிவது சிரமம். ஷாஹ்ஜி, விஜயராகவ நாயகர், முதலாம் சரபோஜி, முதலாம் துளஜா, பிரதாபஸிம்ஹன் அமரஸிம்ஹன், இரண்டாம் துளஜா, இரண்டாம் சரபோஜி, சிவாஜி போன்ற மன்னர்கள் மீதாக அமைந்த இசை உருப்படிகள் எண்ணற்றவை. இதைப் போலவே, மைசூர், திருவனந்தபுரம், ராமநாதபுரம் மன்னர்களின் பேரிலும் ஏராளமான பாடல்கள் கிடைக்கின்றன. சில சமயங்களில், ஒரே வம்சத்தில் உதிக்கும் பல மன்னர்களின் பெயர்கள் ஒரே விதமாயிருப்பதுமுண்டு. கிருஷ்ணராஜ உடையார், சாமராஜ உடையார் போன்ற பெயர்கள்

திரும்பத் திரும்ப, மைசூர் அரசர்களின் பெயர்களாக அமைந்து வருகின்றன.

மூன்றாம் கிருஷ்ணராஜ உடையார் (பட்டம் 30.6.1799 மரணம்: 27.3.1868) சிறந்த கலைப்போஷகர்; இசை விற்பன்னர்களுக்கு அவர் வழங்கிய பேராதரவு அளவு கடந்தது. தஞ்சாவூர் சின்னையாவின் 'நீவண்டி' (கமலாமனோஹரி), மைசூர் ஸதாசிவ ராயரின் 'வனஜாக்ஷி' (மந்தாரி) போன்ற வர்ணங்கள், இம்மன்னர் மீதாக அமைந்தவை. இவை 'க்ருஷ்ணராஜேந்த்ர' எனும் முத்திரையோடு கூடியவை. பிறகு வந்த, நான்காம் கிருஷ்ணராஜ உடையார் (1884-1940) மீது, 'க்ருஷ்ணராஜேந்த்ர' எனும் முத்திரையோடு ஹரிகேசநல்லூர் டாக்டர் முத்தய்யா பாகவதர், கே.வி.ஸ்ரீநிவாஸய்யங்கார் முதலிய பல வாக்கேயக்காரர்கள் வர்ணங்கள், பாடல்கள், தில்லானாக்கள் ஆகியவற்றை இயற்றியுள்ளனர். இதனால் எந்த கிருஷ்ணராஜ உடையார் பேரில், எந்த வாக்கேயக்காரர், எந்தப் பாடலை இயற்றினாரென்பதை அறிவதில் சிரமமுண்டாகிறது. 'ஏமகுவ' (தன்யாஸி) எனும் வர்ணம் 'க்ருஷ்ணராஜேந்த்ர' முத்திரையுடன், மைசூர் ஸதாசிவராயரால் இயற்றப்பட்டதாகச் சில இசை நூல்கள் தந்துள்ளன. ஆனால், இதனை இயற்றியவர் தஞ்சை சின்னையாவே எனத் தெரிகிறது.

'ப்ருஹதீச', 'மஹாதேவ', 'பத்மநாப', 'ஸௌந்தரேஸ்வர', 'பார்த்தஸாரதி', 'ராஜகோபால' போன்ற முத்திரைகளைத் தஞ்சை நால்வரின் பாடற்படைப்புக்களில் காணலாம். 'பத்மநாப' எனும் முத்திரையைத் தஞ்சை வடிவேலு, தம் பாடல்களில் பதித்துள்ள காரணத்தினாலேயே, அவற்றில் மிகுதியானவற்றை மன்னர் ஸ்வாதித் திருநாள் இயற்றியதாகக் கருதும் தடுமாற்றம் விளைந்துள்ளது. 'ராஜகோபால' எனும் முத்திரையைக் கண்டால் இது ஆதியப்பய்யாவுடையதா, தஞ்சை பொன்னையாவுடையதா அல்லது மூவா நல்லூர் ஸபாபதி அய்யாவுடையதா அல்லது வேறு

ஒருவருடையதா என்றறிவதில் சிரமமே மிகுதி. ஆகவே, பாடலினின்று வாக்கேயக்காரரை அறியும் யத்தனத்தில் 'முத்திரை'யென்பது ஓரளவு மட்டுமே துணை செய்யுமென்பது நிச்சயமாகின்றது.

இந்த நூலில் இடம்பெறும் வர்ணங்களும், ஸ்வரஜதிகளும் அநேகமாகத் தஞ்சை மற்றும் அதனைச் சுற்றியுள்ள பகுதிகளுடன் தொடர்பு கொண்டிருப்பதால், அவற்றில் காணப்படும் தெய்வங்கள், மன்னர்கள் அல்லது பிரபுக்கள் பற்றியும் சிறிது கண்டறிவது நலம்.

**அச்யுதவரத:** தஞ்சாவூரிலிருந்து வடமேற்கே சுமார் 7 கிலோமீட்டர் தொலைவிலுள்ளது, மெலட்டூர் எனும் கிராமம். அக்கிராமத்திலுள்ள சிலர் அதன் பழைய பெயர் 'மேளப்புத்தூர்' என்றும் இது வழக்கில், 'மெலட்டூர்' என்றாகி விட்டதெனவும் கூறுகின்றனர். 'ஆடல் வல்லுனர்களின் குடியேற்றபகுதி' என்பதே 'மேளப்புத்தூர்' என்பதன் பொருள் என்றும் விளக்குகின்றனர். ஆயினும், முதலாம் ராஜராஜசோழனின் கல்வெட்டுக்களில், இவ்வூர் 'மிலட்டூர்' என்றே பொறிக்கப்பட்டுள்ளது.

".... நித்தவினோத வளநாட்டுக் கிழார் கூற்றத்துப்பெரு
மிலட்டூர் ஊரார் இடக்கடவ திருமெய்க்காப்பு ஒன்று...."

(S.I.I. தொகுதி 2 எண் 57)

ஆடற்கலையில் வல்ல சில அந்தணக் குடும்பங்கள், ஆந்திர மாநிலத்திலிருந்து பெயர்ந்து, தஞ்சைப்பகுதிக்கு வந்த போது, அவர்களுக்கு தஞ்சை மன்னன், அச்யுதப்ப நாயகர் (1561-1614) இந்தவூரை ஸர்வமானியமாக அளித்தால், இவ்வூருக்கு 'அச்யுதபரி' என்ற பெயர் தோன்றியதென்றும் கூறப்படுகின்றது. ஆயினும், அச்செய்திக்கான ஆதாரம் கிடைக்கவில்லை. இவ்வூரில் ஒரு சிவன்கோவிலும், திருமாலுக்கான ஆலயமும்

உள்ளன. திருமாலின் திருக்கோவிலில் எழுந்தருளியுள்ள இறைவனின் பெயர், லக்ஷ்மீநரஸிம்ஹன் அதன் வளாகத்தினுள்ளேயே வரதராஜருக்கான ஸந்நிதியொன்றும் உள்ளது. படையெடுத்த முகம்மதியர்களிடமிருந்து வரதப் பெருமாளைக் காத்திடும் நோக்கத்தோடு, சில குடும்பங்கள், காஞ்சீபுரத்திலிருந்து வரதரின் படிமத்துடன், மெலட்டூருக்கு வந்ததாகவும், இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில், அதற்கு ஆலயமெழுப்பிப் பிரதிஷ்டை செய்தனர் என்பது சில மெலட்டூர் மக்களின் கருத்து. இது ஏற்புக்குரியதாக இல்லை. ஏனெனில், சுமார் மூன்று நூற்றாண்டுகளுக்கு முன்பே இவ்வூரில் வரதராஜர் ஆலயம், ஏரிக்கரையினருகே இருந்ததென்பதும், அந்த ஆலயம் பாழ்பட்டபின்னர், வரதரின் சிலை, ஊரின் நடுவேயுள்ள நரஸிம்ஹரின் ஆலய வளாகத்தில் நிறுவப்பட்டதென்பதும் தொல்பொருள் ஆய்வறிஞர்களின் முடிவு.

ஆண்டுதோறும், நரஸிம்ஹஜயந்தி நாளின்போது 'பாகவதமேள' நாட்டிய நாடகங்கள், மெலட்டூரில் தவறாமல் நடைபெறுவது வழக்கம்.' அவ்வூர் இறை மீதான பாடல்கள் அச்யுத வரத முத்திரையுடன் அங்கே இடம் பெறுகின்றன. நாராயண தீர்த்தரின் 'பாரிஜாதாபஹரண'த்தின் இறுதிச் சுலோகத்தில் 'அச்யுதவரத' என்றிருப்பது பற்றி முன்னரே பார்த்தோம். அவ்வாறாகில், தீர்த்தருக்கும் மெலட்டூருக்கும் ஏதோ தொடர்பு இருந்திருக்கக் கூடுமெனவும், மெலட்டூரில் முதன் முதலாக அரங்கேற்றப்பட்ட நாட்டிய நாடகம், அவரது 'கிருஷ்ண லீலா தரங்கிணி'யே என்றும் (இது, பரதம், நடேசய்யரின் கூற்று) கருத இடமுண்டு. நாராயண தீர்த்தர், 1676க்கும் 1745க்கும் இடைப்பட்ட காலத்தில் வாழ்ந்தவரெனச் சில நூல்களில் கொடுக்கப்பட்டுள்ளது. ஆனால், அவர், சிறிது முன்பாக, அதாவது, ரகுநாத நாயகரின் காலத்திலிருந்தவர் என்று தீர்மானிக்கச்சில சான்றுகள் உள்ளன.

**உன்னதபுரீச:** மெலட்டூர் சிவன் கோவிலில் உறையும் இறைவனின் பெயர் உன்னதபுரீசர் (அல்லது 'முதந்தீசர்'), அவரது துணைவி சிவப்ரியா, வீரபத்ரய்யா முதலாகப் பல வாக்கேயக்காரர்கள் இவ்விரு இறைகளின் மீதும் பாடல்கள் புனைந்துள்ளனர்.

**பரிமளரங்கர்:** 'பரிமளரங்க' எனும் அங்கிதத்துடன் பல வர்ணங்களும், பதங்களும் உள்ளன. இப்பெயர் கொண்ட வாக்கேயக்காரர் எவரேனுமிருந்தாரா என்பது தெரியவில்லை. ஸுப்பராமதீக்ஷிதரோ, பரிமளரங்கர் எனும் வாக்கேயக்காரர் சென்னைப்பட்டணத்தைத் தாண்டியுள்ள பகுதியில் (?) சுமார் இருநூறு ஆண்டுகளுக்கு (1905க்கு முன்) முற்பட்ட காலத்தில் வாழ்ந்தவரெனக் 'கூறப்படுவதாக' எழுதியிருக்கிறார்.

மயிலாடுதுறையின் புறநகராக அமைந்துள்ள திருவிழந்தூர் (இதன் சரியான பெயர் 'திரு இந்தளூர்'; ஸம்ஸ்கிருதத்தில் 'ஸிந்துபுரி') எனும் பகுதியில் கோவில் கொண்டுள்ள திருமாலின் திருநாமம் 'பரிமளரங்கர்' என்பதாகும். திருமங்கையாழ்வாரின் மங்களாசாஸனம் பெற்ற திவ்யதேசம் இது. 'ராம மந்த்ரோபதேசம்' பெற்றபின், பிரதாபஸிம்ஹன் இவ்வாலயத்துக்குத் திருப்பணி செய்தார். மன்னனின் அவைக் கலைஞர்கள் பலர், பரிமளரங்கர் மீது பாடல்கள் புனைந்து பாடியிருக்கக் கூடும்.

அந்த ஆலயத்தின் ஆஸ்தானக் கலைஞரும், ஸம்ஸ்கிருதம், தெலுங்கு போன்ற மொழிகளில் பாண்டித்தியம் மிக்கவருமான கூறைநாடு நடேசபிள்ளையெனும் பெரியார், பரிமளரங்கருக்கென்றே வர்ணங்கள், பதங்கள், உத்ஸவ ஸம்பிரதாயப் பாடல்கள் முதலியவற்றைத் தெலுங்கிலே யாத்துள்ளார். இவர் கையாண்டிருக்கும் ஒரே முத்திரை, 'பரிமளரங்க' என்பதேயாகும். இவற்றில் பல கிடைக்கவில்லை. சில ஆண்டுகளுக்கு முன் இவரது தெலுங்குமொழி வர்ணங்களிற் சிலவற்றைக் கன்னட மொழியில் நான் பதிப்பித்து, அந்நூலைப்

பெங்களூரிலுள்ளவொரு இசைப்பள்ளி அச்சிட்டு வெளிப்படுத்தியுள்ளது.

என் வசமுள்ள நடேசபிள்ளையின் சுவடிகளில் 'மமத ரெட்டிஞ்செனே' எனும் சுத்த ஸாவேரிராகப் பதவர்ணம் (இந்நூலிலும் காணலாம்) இடம் பெற்றுள்ளது. சென்னை, ஸங்கீத வித்வத்ஸபையின் ஸஞ்சிகையின் (தொகுதி 33) மூலம் இவ்வர்ணத்தை (முழுமையாக அல்லாமல்) பிரசுரித்த டாக்டர் வே.ராகவன், இதனைத் 'திருவாரூர் ஆலயத்துப் பதவர்ணம்' எனத் தலைப்பிட்டுள்ளார். திருமாலின் பேரிலமைந்த இவ்வர்ணம், திருவாரூர்ச் சிவனுக்குரியதாக எவ்வாறாயிற்று என்பது வியப்புக்குரிய விஷயம். உண்மையென்னவெனில், திருவாரூரிலிருந்த 'மஹாவித்வான்' ஸ்வாமிநாத பிள்ளை, இவ்வர்ணத்தை, அதன் கர்த்தாவாகிய நடேசபிள்ளையிடம் நேரில் அறிந்து, அதன் அழகினை முன்னிட்டுக் கையாளத் தொடங்கினார். அடுத்துவந்த சில கலைஞர்கள், அதை ஆலய இசைப் பாடற்பட்டியலில் புகுத்திவிட்டனர்.

**முத்துகுமர:** மயிலாடுதுறைக்குச் சிறிது தொலைவிலுள்ள வைத்தீஸ்வரன் கோவிலில், முருகப் பெருமானாகிய முத்துக்குமரனுக்கு ஸந்நிதி இருக்கிறது. இவ்விறைவனின் பக்தராகிய தஞ்சை ஷாஹ்ஜீ மன்னர், முத்துக்குமரனைப் போற்றிப் பல பாடல்கள் புனைந்துள்ளார். ("....ஷாஹனுத வைத்யலிங்குனி குமார வர முத்துகுமர....") மெலட்டூர், பரதம் காசிநாதய்யாவின் சப்தங்களிற்சில இவ்விறைவன் மீதமைந்தவை. (".....கனவேலா வைத்யலிங்குனி தனய வர முத்துக்குமாரா....") மற்றும் பல வாக்கேயக்காரக்களும், முத்துக் குமரனைப் புகழ்ந்து பாடியுள்ளனர். இந்நூலில், பூர்ணபஞ்சம ராகத்திலமைந்த வர்ணமொன்று இடம்பெற்றுள்ளது.

**தக்ஷிணத்வாரக ராஜகோபால:** 'தக்ஷிணத்வாரகை' என்றும் (இதற்குச் 'சம்பகாரண்யம்' எனும் பெயருமுண்டு), ராஜ

மன்னார்குடி என்றும் கூறப்படும் ஊரிலுள்ள திருமாலின் திருநாமம் ராஜகோபாலன். தஞ்சை நாயக மன்னர்களின் காலத்தில் இவ்வூர் பெருஞ்சிறப்புடன் விளங்கியது. விஜயராகவனின் குலதெய்வம் இந்த ராஜகோபாலன். புதுக்கோட்டையில் வாழ்ந்தவரென்றும், தஞ்சையில் மராத்திய அவைக்கலைஞராக விருந்தவரென்றும் கூறப்படும் பச்சிமிரியம் ஆதியப்பய்யா, எவ்வாறோ 'தக்ஷிணத்வாரக ஸ்வாமி ராஜகோபால என்ற முத்திரையைத் தேர்ந்தெடுத்திருக்கிறார். தஞ்சையில் குடியேறு முன்பாகத் திருமண உறவின் காரணமாகச் சிலகாலம் மன்னார்குடியில் தங்கியிருந்த காலத்தில், தஞ்சை நால்வர், தாமியற்றிய பாடல்களில் 'ராஜகோபால' முத்திரையை உபயோகித்துள்ளனர். மூவாநல்லூர் ஸபாபதி அய்யாவின் பாடல்களிலும் இதே முத்திரை அமைந்துள்ளதெனத் தெரிகிறது.

**பிரதாபஸிம்ஹன்:** தஞ்சையை ஆளவந்த முதல் மராட்டிய அரசன் ஏகோஜியின் பேரனும், முதலாம் துளஜா மன்னரின் குமாரருமாவார். இவரது ஆட்சிக்காலம்: 1740-1763. திருவாரூர்த் தியாகேசப்பெருமானின் பக்தராக இருந்து, மன்னார்குடி ஸேதுபாவா ஸ்வாமிகளால் தாரக மந்த்ர உபதேசம் பெற்று ராமபக்தராக ஆனவர். அரண்மனையினுள்ளேயே பிரதாபராமருக்கு ஆலயமெடுத்தவர். அது முதலாக அரச இலச்சினை 'ராம் ப்ரதாப்' என்ற எழுத்துக்களைக் கொண்டதாயிற்று. ஸுப்பராம தீக்ஷிதர் எழுதியிருக்கின்றவாறு, மிகச்சிறந்த இசைக் கலைஞர் ஒருவர் விண்ணாற்றங்கரை எனும் பகுதியில் வந்து தங்கியிருப்பதைக் கேள்வியுற்று, தானே அங்கு சென்று, வீரபத்ரய்யாவைத் தன்னுடன் அழைத்து வந்து அவைக் கலைஞராக்கிக் கௌரவித்தார். தஞ்சையின் வரலாற்றில், கலைஞரைத் தாமே தேடிச் சென்று அழைத்துவந்த மன்னர்கள் இருவர். முதலாம் ராஜராஜசோழனுக்கு அடுத்த ஸ்தானத்தில் வைத்துப் போற்றத்தக்க, தஞ்சை அரசன் விஜயராகவ நாயகரும்,

மராட்டிய அரசனாகிய பிரதாபஸிம்ஹனுமே அவர்கள். எவ்வித முன்னறிவிப்புமின்றிச் செங்கல்வ காளகவியின் இல்லத்துக்குச் சென்று, அவரோடமர்ந்து உணவருந்திய பெருந்தகை, விஜயராகவ நாயகர்; வீரபத்ரய்யா இருக்குமிடம் சென்று நல்வரவு கூறி, அழைத்து வந்தவர் பிரதாபஸிம்ஹன்.

**இரண்டாம் சரபோஜி:** இரண்டாம்துளஜாவின் தத்துப் பையனான இவர் டேனிஷ் மிஷனின் பாதிரியாரான சி.எஃப். சுவார்ட்ஸ் அவர்களின் முயற்சியாலும், தத்தாஜி அப்பா போன்ற நம்பிக்கையான அலுவலர்களாலும் ஆட்சிக்கு வந்தார். அவர் 30.6.1798 அன்று அரசு கட்டிலேறினார். தமது வாழ்நாள் முழுவதும், இசை, நடனம் மற்றும் நாடகக் கலைஞர்களை ஆதரித்தார். மராட்டியர்களின் சொந்த ஆவணங்களான மோடி ஆவணங்களைப் பார்க்குமிடத்து, இரண்டாம் சரபோஜியின் வசிப்பிடமான சதர்மகால் அரண்மனையில் பல இசை நாடக நிகழ்ச்சிகள் நடைபெற்றதைக் காண முடிகின்றது. சில வெளிநாட்டுக் கலைஞர்களும் இக்குழுவில் சிலகாலம் அங்கம் வகித்தனர். தெலுங்கு இசை வல்லுநர்களின் படைப்புகளும் கூட இவர்காலத்தில் கிடைக்கின்றன. கலைத்துறையில் மொழிப்பேதம் காணப்படவில்லை. சமஸ்கிருதம், இந்தி, மராட்டி மற்றும் தெலுங்குக் கவிஞர்கள் இசையில் ஆதிக்கம் செலுத்தி வந்தனர். அவர்கள் இரண்டாம் சரபோஜியின் மீது புகழ்ச்சிப் பாக்களை இயற்றினர். பொன்னையாவும், சிவானந்தமும் கூட அவரைப் போற்றிப் பாக்கள் இயற்றியுள்ளனர். இம்மன்னர் 8.3.1832 அன்று மறைந்தார். சிறந்த நாட்டிய ஆசிரியர்களாயும், வாக்கேயக்காரர் களுமாயிருந்த தஞ்சை நால்வர், என்ன காரணத்தாலோ, தஞ்சையை விட்டு வெளிக் கிளம்பினர். அவ்வாறு தஞ்சை நால்வர் வெளிப்படுமுன்னர், மன்னர் மீது இயற்றிய பாடல்கள் கிடைக்கின்றன. மீண்டும் அவர்கள் தஞ்சைக்கு அழைக்கப்பட்டபோது, பொன்னையாவும், சிவானந்தமும்

மட்டுமே திரும்பினர், சின்னையா மைசூரிலும், வடிவேலு திருவனந்தபுரத்திலும் தமது இறுதிவரை தங்கிவிட்டனர். சரபோஜி மன்னரைப் போற்றும் விதத்தில் அமைந்த பாடல்களின் தொகுப்பு, 'ஸாஹித்யாசே கோர்வ்யாசே ஜின்னஸ்' என்ற தலைப்புடன் பிரசுரிக்கப்பட்டுள்ளது. அப்பாடல்களை நன்கு பரிசீலித்தால், அவை முதலாம் சரபோஜி மீதானவை எனத் தெரிய வருகிறது. ஸரஸ்வதி மஹால் நூல்நிலையத்தில் ஏராளமான நூல்களைச் சேர்த்துப், பாதுகாக்க வழிசெய்த பெருமை, இரண்டாம் சரபோஜிக்கே உரியதாகும் என்பதை மட்டும் மறுக்கவியலாது.

**சிவாஜி:** தஞ்சையின் கடைசி மராட்டிய அரசர். இரண்டாம் சரபோஜியின் குமாரராக 22.3.1808 அன்று பிறந்து, 1833 ஆம் ஆண்டில் அரியணை ஏறியவர். தன் பாட்டனையும், கொள்ளுப் பாட்டனையும் போலப் பல கலைஞர்களை இவர் ஆதரித்தார். தஞ்சை நால்வரை மீண்டும் திரும்பி வருமாறு அழைப்பு விடுத்தவர் இவரே. இம்மன்னர் மீதும் பல வாக்கேயக்காரர்கள் பாடல்கள் இயற்றியுள்ளனர். தன் மருகர் ஸகாராமின் சூழ்ச்சியினால் இவர் 25.10.1855 அன்று மரணமெய்தினார்.

**அப்புராய:** மைசூர் மன்னர் மும்மடி கிருஷ்ணராஜ உடையார் 1794 ஆம் ஆண்டில் பிறந்து, 30.6.1799 அன்று முடிசூட்டப் பெற்றவர். கலைஞர்களுக்கு இவர் அளித்த ஆதரவுக்கு எல்லையில்லை. பல்லவிகோபாலய்யர் இம்மன்னர் மீது இயற்றியுள்ள காம்போஜி ராக வர்ணம், இந்நூலில் இடங்கொள்கிறது. அதிலே இம்மன்னர் 'அப்புராய சந்த்ர' என்று குறிப்பிடுகிறார். வேறொரு சுவடியின் பிரகாரம் இது 'அப்ரராய சந்த்ர' என்றிருப்பதே பொருத்தமாகவுள்ளது. இதுபற்றிய விளக்கம் முன்னரே கொடுக்கப்பட்டுள்ளது. 27.3.1868 அன்று கிருஷ்ணராஜ உடையார் காலமானார்.

**ராமவர்மா:** இந்நூலில் 'வஞ்சிபால ராமவர்ம குலசேகர' மன்னனைப் போற்றும் தமிழ் வர்ணம் ஒன்றுள்ளது. இவர் மார்த்தாண்ட வர்மா என்ற திருவனந்தபுரம் மன்னரின் ஸஹோதரி குமாரரும், அடுத்த அரசராக 1758 இல் பட்டத்துக்கு வந்தவருமாவார். நாற்பதாண்டுகள் ஆண்ட இவரையடுத்து பாலராம வர்மாவும் (பத்மநாபதாஸ பாலராமவர்மா), அடுத்து ராமவர்மாவும் (இவரே 'ஸ்வாதித் திருநாள்' எனப்படுபவர்) அரசரானார்கள். ஸ்வாதித் திருநாளும் 'வஞ்சிபால'ரேயாயினும், தன் மீது எவரும் பாடலை இயற்றக் கூடாதென்று, வாக்கேயக்காரர்களிடம் கண்டித்திருந்தவர் இவர். எனவே, 'ஆசை மிஞ்சுது' எனத் தொடங்கும் தமிழ் வர்ணம், வஞ்சிபால ராமவர்மா குலசேகர மன்னனையே பாட்டுடைத் தலைவனாகக் கொண்டிருக்கிறது. இதனை இயற்றியவர், தஞ்சை நால்வரின் பாட்டனாரான கங்கை முத்து நட்டுவனார் ஆவார். ஸரஸ்வதி மஹால் நூல் நிலையத்தின் மற்றொரு சுவடியில் காணப்பெறும் தமிழ் வர்ணம் ஒன்றில், "ராமவர்ம குலசேகரேந்திரன் மகிழும் தானாதிபதி மாலமுத்து ஸ்வாமி" என்ற வரியுள்ளது. வஞ்சிபால ராமவர்மனின் காலத்து நிதிச்சாலை அதிகாரியாக இருந்தவர், மாலமுத்தய்யன் என்பவர். இதனைக் கொண்டு, இந்த வர்ணத்தை இயற்றியவரும் கங்கைமுத்து நட்டுவனாரே என்று கொள்ளக் கூடும்.

**யுவரங்க:** உடையார்பாளையம் ஜமீந்தார்கள் 'கச்சிரங்க' 'கல்யாணரங்க', 'யுவரங்க' போன்ற சிறப்புப் பெயர்களுடன் விளங்கியவர்கள். இவர்களில் ரங்கப்ப உடையார், யுவரங்க உடையார், நல்லப்ப உடையார், முத்து விஜயரங்கப்ப உடையார், அபிநவ யுவரங்கப்ப உடையாரென்றெல்லாம் பலர் இருந்துள்ளனர். ரங்கப்ப உடையாருக்குப் பின் ஜமீந்தாராக ஆகிப் பதினெட்டு ஆண்டுகள் ஆட்சி செய்த யுவரங்க பூபதி என்பவர் மீது, அவைக் கலைஞர்களான கனம் கிருஷ்ணையர், ஆதியப்பய்யாவின் சீடரான தஞ்சை 'பூலோக கந்தர்வ' நாராயணஸ்வாமி அய்யர்

போன்ற பலர் பாடல்கள் இயற்றினாரென்று, டாக்டர் உ.வே.சாமிநாதய்யரின் 'நல்லுரைக்கோவை' கூறும். தமிழிலும், தெலுங்கிலுமாக யுவரங்கர் மீது அமைந்த பதங்கள் மிகப்பல. சில தெலுங்குப் பதங்கள் வருமாறு.

செயிபட்டி-சஹான-வீரபத்ரய்யா இயற்றியதாக 'ஸங்கீத ஸம்ப்ரதாய ப்ரதர்சினி'யில் கொடுக்கப்பட்டுள்ளது.

வென்னெலதீரிதே-பைரவீ-

யாலதருலு-மத்யமாவதீ-ஸரஸ்வதி மஹால் சுவடிகள்

நன்னு செளக-யதுகுலகாம்போஜி-ஸரஸ்வதி மஹால் சுவடிகள்

இந்த நூலில், 'யுவரங்க' முத்திரையுடன் 'அலுகனேலரா' என்ற கன்னடவர்ணமுள்ளது. இது 'ப்ராசீனர்கள்' இயற்றியதென, ஸுப்பராம தீக்ஷிதர் கொடுக்கிறார். அவரே, 'சாலநம்மின' எனத் தொடங்கும் (யதுகுல காம்போஜி) வேறொரு 'யுவரங்க' வர்ணத்தைப் பஞ்சாபகேச பாகவதர் இயற்றியதாகத் தந்துள்ளார். பாகவதரின் ஊர்ப்பெயரையும் காணோம். யுவரங்கர், இரண்டாம் துளஜா மன்னரின் ஸமகாலத்தவர் என்றும் தீக்ஷிதர் குறிப்பிட்டுள்ளார்.

**வெங்கடராய:** 'பூர்வீகர்கள்' இயற்றியதாக ஸுப்பராம தீக்ஷிதரால் பிரசுரிக்கப்பட்டிருக்கும் 'ஈவிரஹமெடுல' என்ற நீலாம்பரி ராக வர்ணத்தை, இந்த நூலிலும் காண்கிறோம். வெங்கடராயர் யார் என்பதைக் காண்பது அத்தனை எளிதாக இல்லை. காரணம், தஞ்சையில் பல வெங்கட்ராவ்கள் இருந்துள்ளனர்.

1. வெங்கட்ராவ்-மராத்திய மன்னர் சரபோஜி (II) காலத்தில் ஷரிஸ்ததாராக இருந்தவர். ஆங்கிலேய அரசுப்பிரதிநிதியுடன் அலுவல் பார்த்தவர்.

2. வெங்கட்ராவ் போன்ஸ்லே-இரண்டாம் சரபோஜியின் உறவினர்

3. வெங்கட்ராவ் காடேராவ்-இரண்டாம் சரபோஜியின் உறவினர். திருப்பூந்துருத்தி ஜமீன்தார்.

4. வெங்கட்ராவ் அம்பாஜி ஸர்ஜேராவ் காட்கே-இவர் 'வஜ்ராத்மாப்' ராம்சந்த்ர சிவாஜி ஸர்ஜேராவ் காட்கே என்பவரின் குமாரர்; பட்டுக்கோட்டை கிலேதார் (கோட்டையின் அதிகாரி)

5. ரெட்டிராவ் வெங்கட்ராவ்: கும்பகோணம் ஜமாயின் ராவின் குமாரர் திருவனந்தபுரத்தில் திவானாக 8.2.1816 முதல் பணி புரிந்தவர். தஞ்சை மன்னரின் ஸன்மானங்களைப் பெற்றவர்.

6. வெங்கட்ராவ் கோவிந்தராவ்-தஞ்சையில் சின்னண்ணா என்று அழைக்கப்பட்டவர்.

இவ்வாறு பல வெங்கட்ராயர்கள் உண்டு. இந்த வர்ணம், அநேகமாகத் திருப்பூந்துருத்தி ஜமீந்தார்மீது அமைந்ததாக இருக்கலாம். இது யூகமேதவிர நிச்சயிப்பதற்கில்லை.

பிக்காஜி ராவ்: இந்த நூலில் உள்ள வர்ணத்தில் இவர் ஜீவண்ணா ராயரின் குமாரராகப் பேசப்படுகிறார்.

ஜீவண்ணா ராவ் சிவாஜி பண்டிட் என்பவரின் மனைவிக்குப் பூச்சூட்டல் நடந்த செய்தியை 1797 ஆம் ஆண்டுக்கான மோடி ஆவணம் தருகின்றது. 1822 ஆம் ஆண்டின் மற்றொரு மோடி ஆவணக் குறிப்பில் விட்டோஜி பிக்காஜி என்பவரின் பெயர் காணப்படுகிறது. 1754, 1795 ஆண்டு ஆவணங்களில் தத்தாஜி என்பவருக்கு பிக்காஜிராவ் என்றொருவர் ஸமர்ப்பித்த முறையீட்டு விண்ணப்பங்கள் கிடைக்கின்றன. இவர்கள் எல்லோரையும் விடுத்து, மற்றொரு பிக்காஜிராவ் பற்றியும் அறிகிறோம். அவருடைய தந்தை பெயர் ஜீவண்ணாராவ், இந்த ஜீவண்ணா ராவின் தந்தையான சிவா ராவ்

என்பவர் மன்னன் அமரஸிம்ஹனின் அந்தரங்க ஆலோசகராயிருந்தவர். பிக்காஜி ராவ், அரண்மனையின் நிர்வாகப் பொறுப்பிலிருந்தவர் என்பதோடு, அமரஸிம்ஹனின் குமாரராகிய திருவிடைமருதூர் பிரதாபஸிம்ஹனின் உற்ற நண்பர். இந்த வர்ணம் மட்டுமின்றி வீணைகுப்பையரின் வேறிரு வர்ணங்களும் இருப்பதை முன்பே வேறிடத்தில் குறிப்பிடப்பட்டது. 'ஸாரஸாக்ஷி' (காம்போஜி), 'ஸாமிநின்னே' (சங்கராபரணம்) என்ற அவற்றில் 'பிக்காஜிராய' என்றும் 'வஜீர' என்றுமுள்ள முத்திரைகள், பிக்காஜி ராயரையே குறிப்பிடுவனவாகும். எனவே, இப்போதைக்கு இந்த வர்ணங்கள் யாவும், திருவிடைமருதூர் சிவாராவின் பேரனும், ஜீவண்ணராயரின் குமாரருமான பிக்காஜிராவ் மீது இயற்றப் பெற்றவை என்று கொள்ளலாம்

**பரசுராம:** 1793 ஆம் ஆண்டின் மோடி ஆவணக் குறிப்பு ஒன்றில் பரசுராம் காடே ஸெண்டுபாண்டே என்ற பெயர் உள்ளது. இவர் அரசின் ஆபரணச் சாலைப் பொறுப்பாளர். மற்றொருவர், மராட்டிய மன்னர்களின் கொள்வினை உறவினரான பரசுராம் விடோபாராயர். இந்நூலிலுள்ள 'ஏமந்தயானரா' (ஹுஸேனீ) ஸ்வரஜதியில் 'பரசுராம ஹம்வீர' என்ற பெயர் இருக்கிறது. சுவடிகளிற் கிடைக்கும் 'எந்து நேர்ச்சினாவு' (ஆனந்தபைரவி) எனும் ஸ்வரஜதியில் 'பரசுராம விடராய' என்று முத்திரை உள்ளது. ஆகையால், இந்த ஸ்வரஜதிகளுடைய பாட்டுடைத் தலைவன், பரசுராம் விடோபாராவ் எனக் கொள்ளலாம்.

**சிவசிதம்பர:** 'ரார நன்னேல' (ஆனந்த பைரவி) என்ற வர்ணம் இவரைப் போற்றுகின்றது. வேறெந்தத் தகவல்களும் கிடைக்காத நிலையில், இவர் யாரென்றோ, இவ்வர்ணத்தை இயற்றியவர் யார் என்றோ அறிவது கஷ்டம்.

**மல்லார்ஜீ:** இப்பெயரில் அமைந்த பாடல்களும், வர்ணங்களும் பல. 'ஏமாயலாடிரா' எனும் ஸ்வரஜதியைப் பற்றி எழுதுகையில், டாக்டர் வே.ராகவன் தெரிவிப்பதாவது:-

"எனது தஞ்சை மாவட்ட ஆவணங்களின் வழிகாட்டி (1739-1835) எனும் நூலில் காணப்பெறும் விதமாகத், தத்தாஜி என்பவர், சரபோஜி மன்னரின் அரசு இலச்சினைக்குப் பொறுப்பாளர். தத்தாஜி பற்றிய ஆவணங்கள், 1739 முதல் 1805 வரை உள்ளவையாயிருக்க, அவரது மகன், மல்லார்ஜியின் காப்புக் குறிப்புகள் 1799 முதல் 1831 வரையிலானவை".

இவரே மேலும் கூறுவார்: தத்தாஜி அப்பா, மல்லார்ஜி அப்பா ஆகியோர் தமிழ வேளாளக் குடியினர். மராட்டிய அரசவையுடன் தொடர்பு கொண்டவர்கள் அனுசரித்த வழக்கப்படி, மராட்டியப் பெயர்களைக் கொண்டவர்கள். தத்தாஜி அப்பாவின் இயற்பெயர், கண்ணுஸ்வாமி என்று பரதம் நல்லூர் நாராயணஸ்வாமி அய்யர் தெரிவித்தார். 22.10.1805 தேதியிட்ட சென்னை (அரசுக்) கடிதம் தத்தாஜி அப்பா, தேற முடியாத அளவு நோய்வாய்ப்பட்டிருப்பதாகவும், 11.12.1805 தேதியிட்ட கடிதம், அவருடைய மரணத்துக்கு இரங்கல் தெரிவிப்பதாகவும், டாக்டர் வே.ராகவன், அக்கட்டுரையில் கூறுகிறார். 'ஏமாயலாடிரா' ஸ்வரஜதி, இந்த மல்லார்ஜி மீதில் மெலட்டூர் வெங்கடராம சாஸ்திரி இயற்றினார் என்ற செய்தியும் அந்தக் கட்டுரையில் கொடுக்கப்பட்டுள்ளது.

மல்லார்ஜி என்பவரைக் குறிப்பிடும் பாடல்களிற்சில:-

தளுகு பெளுகு-மங்களகைசிகி-வீரபத்ரய்யா

சின்னதி நீபை-காம்போஜி-

பந்தமேல-ஆனந்தபைரவீ-தஞ்சை பொன்னையா

நேடிகி தயவச்செனா-சஹானா-தஞ்சை பொன்னையா

இரண்டாம் சரபோஜி அரசராக முடிசூட, ஆங்கிலேய அரசு சம்மதம் தந்த விஷயத்தில் பெரும்பங்கு கொண்டவர்கள், மறைதிரு ஷ்வார்ட்ஸ் என்ற பாதிரியாரும், தத்தாஜி

அப்பாவுமேயாவர். பட்டத்துக்கு வந்த சரபோஜி, நன்றி தெரிவிக்கும் வகையில், தத்தாஜி அப்பாவுக்குக் கும்பகோணம் சாலையில் 50 வேலி நிலம் அன்பளிப்பாகத் தந்து, அப்பகுதிக்குச் 'சரபோஜி ராஜபுரம்' என்று 1805 ஆம் ஆண்டில் பெயரிட்டார் என்பதை மோடி ஆவணக் குறிப்பினால் அறிகிறோம். தத்தாஜி அப்பா பிறப்பினால் மராட்டியர் அல்லவென்பதும் உண்மை. ஆனால், அவருடைய இயற்பெயராகக் கண்ணுஸ்வாமி என்பது இருக்கவில்லை. அவரது குமாரர் மல்லார்ஜி அப்பாவின் பெயர்தான் அது என்பதை வேறோரு குறிப்பால் அறிய முடிகிறது.

4.11.1845 தேதியிட்டு, அப்போது தஞ்சையின் அரசுப் பொறுப்பாளருக்கு (ஜே.பிஷப்) மல்லார்ஜி ஒரு மனுச் செய்தார். அதில் "…..ஹுஜுரில் வேலை பார்க்கும் தத்தாஜி அப்பாவின் குமாரரும், கண்ணுஸ்வாமியென்ற பிரதிப்பெயர் கொண்டவருமான மல்லார்ஜி அப்பாவின் மனு……", என்று வருகிறது. மோடி ஆவணங்கள் தரும் தகவலின் பிரகாரம், மல்லார்ஜி அப்பா, சிறுவயதிலிருந்தே தீய வாழ்க்கையில் திளைத்துக், கடன்கள் மிகுத்துத், துன்பத்தில் சிக்குண்டார். தன் கிராமங்களான வடமட்டம், பூங்குடி இரண்டையும் அரசு எடுத்துக்கொண்டு அதற்குரிய துகையை அளித்து உதவவேண்டுமென்ற கோரிக்கையை அம்மனுவில் வைத்துள்ளார். கடன்காரர்களின் தொல்லை தாங்க முடியவில்லை என்பதை அதில் குறிப்பிடுகின்றார். இந்தமனு, சென்னையிலிருந்த ஆளுநரால் பரிசீலிக்கப்பட்டு, 1846 ஆம் ஆண்டில் இவ்விரு கிராமங்களும் ஆங்கிலேய அரசின் வசமாக்கப்பட்டு, எழுபதினாயிரம் ரூபாய் மல்லார்ஜி அப்பாவுக்குக் கொடுக்கப்பட்டது.

வேறொரு மோடிக் குறிப்பில், தன் மகளின் திருமணத்துக்காகச் செய்யப்பட்ட சிலவுத்துகையை, 1834 ஆம் ஆண்டில், அரசாங்கமே ஏற்று, அத்துகையைத் தத்தாஜி அப்பாவுக்குத் திருப்பிக் கொடுத்தது, எனும் செய்தி உள்ளது.

சரபோஜி 1832 ஆம் ஆண்டில் காலமான பின்பு, பல ஆண்டுகள் தத்தாஜி அப்பா வாழ்ந்திருந்தார் என்பது தெரிகிறது. இவையெல்லாம் ஒருபுறமிருக்க, மற்றொரு சுவையான விஷயம் யாதெனில், வேறொரு தத்தாஜியும் இருந்திருக்கிறார் என்பதும், அவருடைய குமாரர் பெயரும் மல்லார்ஜி என்றிருந்தது என்பதே. டாக்டர் வே.ராகவன், பல ஆதாரங்களோடு குறிப்பிடும் தத்தாஜி அப்பா, மல்லார்ஜி அப்பா, வேறு, இனி, நாம் காணவிருக்கும் தத்தாஜி, மல்லார்ஜி என்போர் வேறு.

தத்தாஜி, திருப்பூந்துருத்தி ஜமீந்தார்; பிரதாபஸிம்ஹனின் மாமன்; ஆங்கிலேயரிடம் பலவாறு எடுத்துக் கூறிப் பெரு முயற்சி செய்து, பிரதாபஸிம்ஹனை மன்னராக்க முனைந்தவர்களில முக்கியமானவர்; அதுகாறும் ஆட்சியைக் கவர்ந்திருந்த ஸயாஜிராவ், காட்டுராஜா முதலியோரைப் பதவியிலிருந்து அகற்றப் பாடுபட்டவர்களில் ஒருவர். அவருடைய முழுப்பெயர் தத்தாஜி காடேராவ் ஸாஹேப் என்பதாகும்.

'காடேராவ்' என்பதைத்தான், சென்னை ஆவணங்களில் 'காடி' என்று ஆங்கிலேயர்கள் எழுதி வைத்துள்ளனர். இவருடைய குமாரரான மல்லார்ஜி காடேராவ் ஸாஹேப் என்பவர், பிரதாபஸிம்ஹனின் தங்கையான சியாமளா பாய் (சாமா பாய்) என்பவரை மணந்தார். மராட்டியப் பேரரசின் வட எல்லையின் நிர்வாகப் பொறுப்பையேற்று, சீர்காழியில் வசித்து வந்த மல்லார்ஜி, திருப்பூந்துருத்தி கோவிலுக்கு ஒருவேலி நிலம் 1741 ஆம் ஆண்டில் வழங்கினார். இச்செய்தியைத் தெரிவிக்கும் செப்பேட்டுச் சாஸனம் பற்றி, செ.இராசு தொகுத்துத், தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகம் வெளியிட்டுள்ள 'தஞ்சை மராட்டியர் செப்பேடுகள்' (ப.223) என்ற நூலில் காணலாம்.

மற்றொரு கல்வெட்டுச் சாஸனம், குடவாயில் எம்.பாலசுப்பிரமணியன் எனும் ஆய்வறிஞரால் வெளியிடப் பெற்றுள்ளது. தருமபுரம் ஆதீனத்தைச் சேர்ந்தவரும், அந்த

ஆதீனத்துக்குச் சொந்தமான வைத்தீஸ்வரன் கோவிலின் நிர்வாகியுமான முத்துக் குமாரஸ்வாமி தம்பிரான் என்பார் 1767 ஆம் ஆண்டில், அக்கோயிலின் திருப்பணி செய்தது பற்றிய செய்தியைத் தருகிறது, இக்கல்வெட்டு. "போசல வங்சத்தாரான துளஜா மகாராஜா சாயேபு அவர்கள் ராச்சிய பரிபாலனம் பண்ணுகுற நாளையில் மல்லாச்சி காடோராயர் அவர்களுக்கு சீகாழிச்சீமை முகாசு நடக்கையில்......."

என்று, மல்லார்ஜி காடேராவ் ஸாஹேபை, இது குறிக்கிறது. இவரது உருவச்சிலை, வைத்தீஸ்வரன் கோவிலில் இன்றும் இருக்கிறது.

சலவைத் தொழிலாளர்களுக்கென, நகரக் கோட்டைக்குள், பிரத்தியேகமான குளம் வெட்டித்தந்து உதவினார் மல்லார்ஜி என்ற செய்தியைக் கொண்ட மற்றொரு கல்வெட்டு, தஞ்சை அய்யன் குளத்தின் படிக்கரையில் இருக்கிறது.

பிரதாபஸிம்ஹனுக்குப் பின் பதவியேற்ற இரண்டாம் துளஜாவின் ஆட்சிக் காலத்திலும், இந்த உயர் பதவியை மல்லார்ஜி வகித்து வந்தார்.

இரண்டாம் சரபோஜி காலத்தவரான தத்தாஜி அப்பா, மல்லார்ஜி அப்பா முதலியோர் தமிழ வேளாளர்கள், தத்தாஜி காடேராவ், மராட்டியர், 'சின்னதி நீபை' என்ற பாடல் மல்லார்ஜியைப் புகழும்போது "ஜாதிலோ மராடிரா" என்றே பேசுகிறது. சரபோஜி காலத்துத் தத்தாஜியின் மனைவி, கிருஷ்ணவேணி என்பதாகும. தத்தாஜி காடேராவின் மனைவி, கமலாம்பா பாய் ஆகும். இதனைத் 'தளுகுபெளுகு" எனத் தொடங்கும், மல்லார்ஜி மீதான பாடலில் காணப்படும், ".....கங்காகுல தீரா தத்தாஜி கமலாம்பா குமாரா"... என்ற வரியின் மூலம் அறியலாம். இந்தப் பாடல், முதலாவதாகவுள்ள சிலவரிகளை மட்டுங்கொண்டு, மற்ற வரிகள் மாற்றப்பட்டும்.

பாடலின் நீளம் சுருக்கப்பட்டுமிருப்பது பற்றி முன்பே கூறப்பட்டது. மூலப் பாடலை இயற்றியவர் வீரபத்ரய்யா என்பது தெளிவு.

ஆவணக் குறிப்புகளின் வாயிலாக, இந்த மல்லார்ஜி காடேராவ், பெரும் பக்திமான் என்பதும், கலைஞர்களுக்கு நல்லாதரவு நல்கியவர் என்பதும், கொடையில் 'கர்ணனு'க்கொப்பானவர் என்பதும் நன்கு புலனாகின்றது. இப்படிப் பட்டவரைத் தான், வாக்கேயக்காரர்கள் போற்றிப் பாடியிருப்பாரே தவிர, தீச்செயல்களின் வழிபட்டு வாழ்ந்த (இரண்டாவது) மல்லார்ஜி அப்பாவின் மீது எவரும் பாடியிருக்க நியாயமில்லை. ஆகவே, மல்லார்ஜியின் பெயரைக் குறிப்பிடும் வர்ணங்கள், ஸ்வரஜதிகள், பிறபாடல்கள் யாவும் மல்லார்ஜி காடேராவின் மீது இயற்றப்பட்டவைதான் எனக் கூறலாம். இவர்மீது மெலட்டூர் வெங்கடராமய்யா, தஞ்சை நால்வர் முதலியோர் பாடியுள்ளனர். ஆனால், 'ஏமாயலாடிரா' என்ற ஸ்வரஜதியை மெலட்டூர் வெங்கடராம 'சாஸ்திரி' இயற்றியதாக டாக்டர் வே.ராகவன் கூறியிருக்கும் கருத்து, ஏற்புக் குறியதல்ல.

நாட்டியத்துக்கென்றே பல்வகைப் பாடல்களை இயற்றிய பெரியோர் வரிசையில், குறிப்பிடத்தக்க முதன்மை ஸ்தானத்தைப் பெற்றவர்கள் 'தஞ்சை நால்வர்' எனில் மிகையல்ல. இவர்களும், இவர்களுடைய முன்னோர்களும் படைத்துள்ள பாடல்கள், நாட்டியக் கலையின் மணி முடியில் பிரகாசிக்கும் விலைமதிப்பற்ற ரத்னம் போன்றவை. நால்வர் வகுத்த ஆடல் முறைமை, அக்கலையைக் கையாளும் அனைவருக்கும் வழிகாட்டும் பெருந்தீபமாக இன்றுவரை சுடர்விட்டுக் கொண்டிருக்கின்றது.

விஜயராகவ நாயகரின் ஆட்சி முடிவுற்றதும், தஞ்சையிலிருந்து மதுரைக்கும், பின் திருநெல்வேலிக்கும் சென்று வாழ்ந்திருந்த குடும்பமொன்றில் தோன்றியவர்கள், மஹாதேவன்,

கங்கைமுத்து, ராமலிங்கம் எனும் ஸஹோதரர்கள். இரண்டாம் துளஜா மன்னர், இவர்களைத் தன் ஆட்சிக் காலத்தில், மீண்டும் தஞ்சைக்கு வரச்செய்தார். கங்கை முத்துவின் இரு குமாரர்களான சுப்பராயன், சிதம்பரம் ஆகியோரும் இசையிலும், நாட்டியக் கலையிலும் வல்லவர்கள். மோடி ஆவணங்களில் (1780) சுப்பராயனின் பெயரைக் காண்கிறோம்.

சிதம்பரமோ, லௌகிக வாழ்க்கையில் விருப்பற்றுத், துறவு மேற்கொண்டு, சிதம்பரநாதயோகி என்ற பெயர்பூண்டு, காசிக்குச் சென்றுவிட்டார். 'தஞ்சை நால்வர்' என்று குறிக்கப்பெறும் சின்னையா, பொன்னையா, சிவானந்தம், வடிவேலு என்போர், சுப்பாராயனின் குமாரர்கள். நாட்டியக் கலையைத் தந்தையிடமே பயின்ற இவர்கள், இசையை, முத்துஸ்வாமி தீக்ஷிதரிடம் கற்றுத் தேர்ந்தனர். சின்னையாவுக்கு அம்மாசத்திரத்தில் திருமண மாயிற்று; சிவானந்தத்தின் மனைவி, தையல்நாயகி, மன்னார்குடியைச் சேர்ந்தவர். பொன்னையாவும், வடிவேலுவும், ஒரத்த நாட்டைச் சேர்ந்த இரு ஸஹோதரிகளை மணந்து 'ஷட்டகர்'களாகவும் ஆயினர். சின்னையாவுக்கும், வடிவேலுவுக்கும் சந்ததியில்லை. பொன்னையாவின் மூத்த மகளான குட்டியம்மாளின் கணவர், பந்தணைநல்லூர் ஸூர்யமூர்த்தி நட்டுவனார். ( 'நாட்ய கலாநிதி' மீனாக்ஷி சுந்தரம் பிள்ளையின் தந்தை). பொன்னையாவின் இரண்டாவது மருகர், சென்னை ஜகந்நாத நட்டுவனார்; நெல்லியப்ப நட்டுவனாரின் (1854-1905) தந்தை; கந்தப்ப நட்டுவனாரின் பாட்டனார். பொன்னையாவின் மூன்றாவது பெண்வழி கொள்ளுப்பேரன், பந்தணைநல்லூர் சொக்கலிங்க நட்டுவனார். தஞ்சை நால்வரில், சிவானந்தம் என்பவருக்கு மட்டுமே மஹாதேவன், ஸபாபதியென்று இரு ஆண் சந்ததிகள். மஹாதேவ நட்டுவனாருக்கு நான்கு பெண்கள். அவர்களில் மூத்தவர், திருத்துறைப் பூண்டி ஸ்வாமிநாத நட்டுவனாரின் ('காயக ஸித்தாஞ்ஜனம்' இவரைத் 'தஞ்சை ஸ்வாமிநாதன்' எனக்

குறிப்பிடும்) மனைவி. இரண்டாவது மகள், கல்யாணத்தம்மாள், பந்தணைநல்லூர் மீனாக்ஷி சுந்தரம்பிள்ளையின் மனைவி, மற்ற இருபெண்களும் முறையே பந்தணை நல்லூர் மீனாக்ஷி சுந்தரம்பிள்ளை, திருத்துறைப் பூண்டி ஸ்வாமிநாத பிள்ளை ஆகியோரின் 'ஒன்றுவிட்ட' தம்பிகளை மணந்தனர். ஸபாபதி நட்டுவனாருடைய குமாரர்கள், தஞ்சை கண்ணுஸ்வாமி நட்டுவனாரும் (இவரைப் 'பரோடா கண்ணுஸ்வாமி' எனக் குறிப்பதுமுண்டு), வடிவேலு நட்டுவனாருமாவர். வடிவேலு நட்டுவனார், ராமநாதபுரம் மன்னர் பாஸ்கர சேதுபதியின் போற்றுதலைப் பெற்ற ஆஸ்தான வித்வான். கண்ணுஸ்வாமி நட்டுவனாரின் குமாரர், 'ஸங்கீத கலாநிதி' கே.பொன்னையா பிள்ளை; இவர், பந்தணை நல்லூர் மீனாக்ஷி சுந்தரம் பிள்ளையின் மருகர். 'நாட்ய கலாநிதி', கிட்டப்பா பிள்ளையும் (இவரது இயற்பெயர், ஸபாபதி), வீணை வித்தகர், சிவானந்தம் பிள்ளையும், பொன்னையா பிள்ளையின் குமாரர்கள்.

முதலாம் ராஜராஜனின் கல்வெட்டொன்று, பிரஹதீஸ்வரர் ஆலயத்தில் நாட்டியச் சேவைபுரிய, அம்மன்னன் பல ஊர்களிலிருந்து நடன நங்கைகளைத் தஞ்சைக்கு வரச் செய்து பணியிலிருத்தினான். அவ்வூர்களில் பந்தணைநல்லூரும் ஒன்று என்பதனைத் தெரிவிக்கின்றது. குறைந்த பக்ஷம், நாயக மன்னர்களின் காலத்திலிருந்தே, பந்தணைநல்லூர் ஆடற்கலையிற் சிறந்தவர்களைத் தோற்றுவித்து வந்துள்ளது. விஜயராகவ நாயகர், அவ்வூரைப் புனர் நிர்மாணம் செய்தார். அவரது அவைக் கவிஞரும், ஆடலில் வல்லவளுமான பசுபுலேடி ரங்காஜம்மா, பந்தணைநல்லூரில் வாழ்ந்திருக்கிறார். அவ்வூரில் குமாரஸ்வாமி நட்டுவனார், விச்வநாத நட்டுவனார், முத்தய்யா நட்டுவனார், அருணாசல நட்டுவனார் போன்ற நாட்டிய மேதைகள் தோன்றியிருக்கின்றனர். ஆயினும், அவ்வூரின் பெருமையை உலகெங்கும் பறைமுழக்கச் செய்த பெருமை, மீனாக்ஷிசுந்தரம் பிள்ளையையே சாரும். திருவாழப்புத்தூர்

கல்யாணி, பந்தணை நல்லூர் தங்கச்சி, ஸபாரஞ்சிதம், ஜயலக்ஷ்மி மற்றும் ருக்மிணிதேவி அருண்டேல், ராம்கோபால், கிருஷ்ணாராவ் போன்ற ஏராளமானோரை ஆடற்கலையிலும், காட்டு மன்னார்குடி முத்துக் குமரப்பிள்ளை, பந்தணைநல்லூர் சொக்கலிங்கம்பிள்ளை, திருவாழப்புத்தூர் ஸ்வாமிநாத பிள்ளையென்று பலரை நாட்டிய ஆசான்களாக்கியும் புகழீட்டியவர் மீனாக்ஷி சுந்தரம் பிள்ளை.

தஞ்சை நால்வர், இரண்டாம் சரபோஜியின் ஆட்சியின் போது, சிலகாலம் தஞ்சையின் அவையிலிருந்ததோடு, பிரஹதீஸ்வரர் ஆலயத்திலும் கைங்கரியம் செய்து வந்தனர். தஞ்சை வாழ்க்கையில் வெறுப்புற்று பின்னர் ஏதோ ஒரு காரணத்தினால் நால்வரும், எல்லை கடந்து வேற்றூர்களுக்குச் சென்றனர். சின்னையா, மைசூர் அவையில் தங்கினார். வடிவேலு, திருவனந்தபுரம் அரசவையில் தலைமைக் கலைஞராக விளங்கினார். வயலின் வாத்தியத்தில், கர்நாடக இசையை முதன்முதலாக வாசித்த பெருமைக்குரிய இவருக்குத், தந்தத்தால் செய்யப்பட்ட வயலின் ஒன்றை ஸ்வாதித் திருநாள் மன்னர் அளித்துள்ளார். சின்னையாவும், வடிவேலுவும், மன்னர் மீண்டும் அழைத்தும், இறுதிவரை தஞ்சாவூருக்கு வரவேயில்லை; பொன்னையாவும், சிவானந்தமும் தான் திரும்பி வந்தார்கள்.

இந்த நால்வரின் பாடற்படைப்புகள் ஆடலரங்குகளிலும், இசையரங்குகளிலும் முழங்கப் பெற்று வந்தாலும், வெளிவராத பல, இன்னும் சுவடிகளிலேயே உறங்கிக் கொண்டிருக்கின்றன. அவை வெளியானால், கலையுலகத்துக்கு மேலும் பயன்தரும்.

இப்போது பதிப்பிக்கப் பெறும் இந்நூல், தஞ்சை ஸரஸ்வதி மஹால் நூல் நிலையத்திலுள்ள ஒரு சுவடியில் காணப்பெறும் பதவர்ணங்கள், ஸ்வரஜதிகள், தானவர்ணங்கள் போன்ற வற்றைத் தாங்கி வருவதாகும். இச்சுவடியின் எண்.B.11616ஆ (டி

எண்கள்:10357, 10843). தெலுங்கு, தமிழ், மராடீ முதலிய மொழிகளில் அமைந்த பாடல்களைக் கிரந்த எழுத்தால் பொறிக்கப்பெற்ற பனையோலைச் சுவடி இது. இச்சுவடியில் மொத்தம் 67 ஓலையேடுகள் இருப்பினும், இங்கு இடம் பெறும் பாடல்கள் 51 ஓலையேடுகளில் மட்டுமே உள்ளன. இச்சுவடி. அதற்கு முன்னராகவிருந்த வேறொரு சுவடியிலிருந்து பிரதி செய்யப்பட்டதென்பதைச், சுவடியின் இறுதியிலுள்ள செய்தியால் அறியலாம்.

ஸ்ரீராமஜயம்|| கோபாலக்ருஷ்ண ஸ்வாமி ஸஹாயம்|| பரம குரவே நம:|| ப்லவ வர்ஷம் ஆவணி மாதம் 28 ஆந் தேதி எளுதி முடிஞ்சுது || லிகிதவான் கோபால:||

நடுவில், தமிழ்மொழியிலமைந்த (எழுதப் பட்டிருப்பது கிரந்த எழுத்துக்களால் தான்) செய்தி, இச்சுவடி பிரதியெடுக்கப்பட்டு முடிந்த தேதியை அறிவிக்கிறது. அதன்படி ஆங்கிலத் தேதி 11.9.1842 (ஞாயிற்றுக்கிழமை) என்றாகிறது. எனவே, இது சிவாஜி மன்னரின் காலத்தில் படியெடுககப் பட்டுள்ளது. 'ப்லவ' என்று மட்டுமே இருப்பதைக் கொண்டு, அதற்கு நேரான ஆங்கில ஆண்டு 1782 ஆகவோ, 1902 ஆகவோ இருக்கக் கூடுமோ என்ற ஐயப்பாட்டுக்கு இடமில்லை. சுவடியின் ஏடுகள் 1800க்கு முந்திய காலத்தவை என்று கூற முடியாதென்பது, பண்டிதர்கள், விஞ்ஞான வல்லுனர்கள் ஆகியோரின் முடிவு; மேலும், 1902 ஆம் ஆண்டில் நூலகத்தின் நடவடிக்கைகள் தடைப்பட்டிருந்தன. எனவே, இச்சுவடி 1842 ஆம் ஆண்டைச் சேர்ந்ததே. 1841 ஆண் ஆண்டில் 'நௌகா சரித்திரம்' பிரதி எடுக்கப் பட்டுள்ளது. அந்தப் பிரதியைச் செய்தவர் ''கோபால அய்யங்கார்'', இந்தச் சுவடியிலும் அதே கையெழுத்தும், எழுதியவர் பெயர் 'கோபால' என்றிருப்பதும், நமது முடிவுக்குத் துணை செய்கின்றன.

இச்சுவடியிலுள்ள ஓரிரு ஸ்வர ஜதிகள், இதே நூலகத்திலுள்ள B.11618, B.11605C என்ற எண்களையுடைய வேறு சுவடிகளிலும் காணப்படுகின்றன. அவையும், இத்துடன்

ஒப்பு நோக்கப்பட்டு, வேறுபாடுகளிருப்பின், அவற்றை அடிக்குறிப்பில் கொடுத்துள்ளேன். B.11616, B.11618, B.11605C என்ற இம்மூன்று சுவடிகள் அல்லாமல் நாகப்பட்டணம் 'ரக்தி' வீராஸ்வாமி பிள்ளை எனும் இசை விற்பன்னரின் 1870 ஆம் ஆண்டுக்குரிய சுவடியொன்றும், ஒப்பு நோக்குதற் பொருட்டு என்னிடம் கிடைத்தது. கல்யாணிராகம், ஆதிதாளத்தில் அமைந்த 'வனஜாக்ஷிரோ' போன்ற பல வர்ணங்களை இயற்றிய இந்த வீராஸ்வாமி பிள்ளையின் சுவடியிலும், தற்போது வெளியிடப் பெறும் சுவடியிலுள்ள பல ஸ்வரஜதிகளும், வர்ணங்களும், முழுமையாகவோ, பகுதியாகவோ-ஆனால் சரியான தாள-ஸ்வரக் குறியீடுகளுடன் காணப்படுகின்றன. எனவே, அவற்றையும் ஒப்புநோக்கி, அதனை சுவடி B என்ற குறியீட்டோடு ஆங்காங்கே கொடுத்துள்ளேன்.

சுவடிகளை எழுதுபவர்கள், பிரதியெடுப்பவர்கள் எல்லாருமே இசை தெரிந்தவர்களாகத்தான் இருப்பார்களென்று கூறமுடியாது. எனவே, ஸ்வரங்களையும், அவற்றுக்குரிய ஸாஹித்ய எழுத்துக்களையும் நேருக்கு நேராக இல்லாமல், தமக்குத் தோன்றியவாறு அவர்கள் எழுதியிருக்கக் கூடும். நெடிலுக்குக் குறிலும், குறிலுக்கு நெடிலும் போடுவதும் ஸஹஜம். ஓரிரு இடங்களில் ஏதேனும் ஸாஹித்ய எழுத்து விடப்பட்டிருக்குமானால், உரிய எழுத்தை அந்தந்த இடத்தில் அடைப்புக் குறிகளினிடையே கொடுத்திருக்கிறேன். இவையல்லாது, ஜயதேவரின் அஷ்டபதிகள் இரண்டு (1. யமுனாதீர-நான்காம் ஸர்க்கம்-ஸ்நிக்த மது-ஸூதன:- 2. அஹமிஹ நிவஸாமி-ஐந்தாம் ஸர்க்கம்-ஸாகாங்க்ஷ புண்டரீகாக்ஷ:) இச்சுவடியின் இறுதிப் பகுதியில் உள்ளன. அவை முழுமையாக இல்லாமலும், தெலுங்கு மொழிபெயர்ப்புடனும் காணப்படுவதால், அவை இந்நூலில் சேர்க்கப்படவில்லை.

**பி.எம். சுந்தரம்**

रागमालिका - रागं[1] तोयजाक्षि नामोहनांगुनि[2]

(मोहनम् ) गा रिगपाप गधाध गपगरिग धपधसा

ई विरहंबु सहिंप तरमटवे विभुनितो

पधप गप्पाग रिगसरि . ।।

मनवि बिरान देलुपवे ।।

(तोडि) तोडि त्यावे इपुडु सामिनि ।।[3]

गरिनि धानिसरि गा मगम धानि सनिरी निधमगा मगरि ।।

मरुनि तूपुलकु ने निकनु ताळ नेचनि नयमुगा देलिपि ।।

(वराळि) आ ।। जलस्य वराळि ।।[4]

गारिग मप धापम पधसा रिगरि सारिनिध पाध पम गारिगम ।।

कामुनि रति लीललु वगगा सलुप रे पगलु दानि यर निमिषमु ।।

(हुशानि) बहुशा निनु वेड़ितिननि ।।[5]

रीरी रिगम पामा पसनि धापा मपम गरि नीरी

चारा वलपु मीरा तनिवि दीरा पेनगि मन सारा

निस रिगम - रिंगमपाम पनिधपमाप धनिस धपधस

रति नेनय - पधप गपागरिगसरि ।।

(नाट) च ।। चिन्ननाटनुण्डि ।।[6]

पा ममपमाम मरिसमम — पसा सनिप मपा ममरि

ऐ साल निनुविना नोरुनिलक् चेलिमि अनुं गोनुट दलंचुमनि

समगम ।।

देलुपुचु ।।

(नाटकुरञ्जि) जेसि मरुनाटकु रञ्जिम्पक ।।[7]
मगम धानि धनिसनि धनिपाधनि धमगसामगसा
सरस जेरि वगवग सरसम्बुलु रतिविनोद्मुलु
निधा निसरिगम ।।
मरिन् मनमलर ।।

(कन्नड) नापैयिन्त कन्नेड शाय तगुनटे ।।[8]
गामाम गम पापमधा निस धापाम गापाम गामरीस ।।
येमंदु शशि काकलचे बलु तल्लाड नोंदुचुन्न नायेडनु ।।

(श्री) नन्नेलु श्री अच्युत वरदुनि ।।

निसा रीग रिसरिमापा निपम पानि सनिपनी पापाम
इदे मंचि समयमंचु देलिपि चार रम्मनवे एराकु
रिमपनि ।
तकदनि ।
निसरिगरि सरिमपनि पमपनिनिस ।
(मोहनम्) धपधसा पधप गपाग रिगसरि ।।

तोयजाक्षि ना मोहनाङ्गुनि ।।
।। श्री वरदराज सहायम् ।।

**Foot Note :**

1. No Tala is mentioned.
2. The line is incomplete; it should have some word like 'Rammanave', the notation for the line is not given 3-4-5-6-7-8 and 9: No Notation is found for these lines.
4. 'Jalasyavarali', as given in the manuscript should read as 'Varali'.

   Since the mudra 'Achyuta Varada' is there, it is considered to be a composition by Veerabhadrayya.

## 2. तालं । झंपै[1] - निन्नुकोरिरा सारंग गमन - आदि [2] ।

(सारङ्ग)
रीगमरिस पा मधपमा पधनिसा पधपमा
नी महिमलु ता विनिविनि वलपुचे सोलयुचुन्
मपम री गमरि सारिसरि ।।
सदय नी सरस चेरुटकु ।।

(कल्याणि) नीके तगिन नित्यकल्याणिर ।।
सासनि रीरिसगा रिग मागरि गाम पाधपध मनिध
नीपद सारसगे गति यंचुनु नीदु सन्निधिनि निलिचि
पा मपमगा रिगरिसरि ।।
ता भजनले सलुपुनदि ।।

(भैरवि) अ ।। सन्नुकाङ्गिनि नेलुमु भैरवी मनोहर ।।
नी धधनि धधमा गमग रिगसा रिनिध निसरी गमध
नी दयकु मिगुला वलचे नबल सरस बिलिचि यिपुडु
धनिधानि धमगम ।।
नेनरुञ्चि सततमु ।।

(सावेरि) सरसावेरिक शायक उन्नतपुरीश ।।
रीरि गरि सारिरिधरी रिसरिमापम पधा धरिसनिध
निन्नु विना दैवमुलुनु दलंचलेदनि सदा पद्मुलकु
पधनि पधमपध - रिसनिध सरिमागरिस । धाधा[3]
शरणु शरणनेर
पमाप धपमागरिस रिमपध मपधस ।।

(पूर्ण चन्द्रिक) निन्नेकोरि मोलक नव्वुचु पूर्णचन्द्रिकरा ।।
सासा रिगमपापा मगमरीरी सनिपधरीसरि
बाला विमलशीला सुगुणलोला मधुरस मोलक
गमपसनिप मरिस रिगम ।।
कलकलमनि पलुकु चिलुक ।।

(बिलहरि) मुदित नड्डुमु बिलहरिरा ।।
सरिग पापमग धाध पमगरिग पधध रीसनिध
मोगमु चन्दुरुनि बोलु कमलमुल गेलुचु कनुगवलु
पधनिपाध मगरि सारि निधसरि ।।
कुरुलुतेटि गुमुलु नेलु सोगसदि ।।

(आरभी) अलर नी मनसारभिमानमु युञ्चि ।।
मगरिरि ससधस सरी मगरिरि पाप ममप
अनयमु यलचेलि तन मनमुन निनु दलचि
मगरिसरि मपधस सा धाध पाप मागरिसरि ।।
सोलयुचुनु मरिमरि नी सरसकु कोरिवच्चिन ।।

(आहरी) या हरिणाक्षि नेलु अच्चुत वरदसख ।।
गाग पाग मप धापम गारि सागरिस गमप सानि
चार दीसि तनु लालन सेय मञ्चुन्नदि मिगुल वेड्डु
धापम पामगारिस गगम ।
कोम्मन विन्नविञ्चिति निपुड्डु
धाधा पमाप धपमापम रिगमरिसरि [4] ।।

**Foot Note :**

1. The raga name is not mentioned. But this is in ragamalika.
2. The word 'Adi' here has no relevance and should be deleted.
3. An extra svara passage is given without any sahitya.

   The lyrical lines at the commencement of every raga have no notation. Since the last ettugada sahitya contains the mudra 'Achyuta Varada', this is also considered a composition of Veerabhadrayya.
4. This svara line is given extra.

## 3. आनन्दभैरवी ।। ।। आदि ताळवर्ण

रिगमरिसरि - कोरि[1]

एन्त वञ्चन जेसेने वीडु ।। इन्तिरो विनवे ।।
अन्तरङ्गमु विडनाडे अच्युतपुर मान्य श्री वरदुडु ।।[2]

स्वरसाहित्यम् ।

पासा सनिधप मापमगरिस निसागगम गमपगाम
चाला वलचिन नन्नलमरुनि शरम्मुलकु दगलजेसि
पामगम । पसनिधपम पधप सास पधमपाप
पलुगरु । जलजमुखिनि येनसि नाडु इपुडुवाडु
गरिगमाम गरिसनीस गम ।
सरसराडु मनुपलेडु ननु ।

ारडवगलु देलिपेद विनवे ।[3]

सारानि निनिसगा गगप गाम गरिसनि ।। 1 ।।

गुच्चट लाअच्चट चलमु सेय दमिच्चट ।।
गामपम गरिगाम गरिसनिस निसनिगरि
वेडुदलु पदिवेलु चेलियटनु दिनदिनमु
मगरि पमगरीनि ।। 2 ।।
बिगुवु तनयेडनु ।।

पाधपम मापमग गामगरिसा गगरि नीसम गरिनि ॥ 3 ॥
चालरति लीलसर सालतिवतो विरस माटलु तनतो ॥

सा सा सा मगरिसगरि नीसा नीधप माप गामप
ए वेळा यलमदनुनि केळिन् चालने केरु दानितो
पधपसनिस + गरिसनिस पासानि धपम पामगरिस
विडपलुकु म न्नमे तनतो मरेमि सोगसु मेलुतोलिय
नीस मगरिनि ॥ 4 ॥
नुंगु दलंचडु ॥

गारडवगलु देलिपेद विनवे नीरजाक्षि ॥[4]

कनकाङ्गिनियरनिमिषमु बायडे नीरजाक्षिरो
नन्नेलिनवाडु नेनरु मरचि श्री अच्युत वरदुडु [5] ॥ – एन्त वञ्चन

गुरुभ्यो नमः । श्री रामा शरणं ॥ यिंदवर्णं शुप्पु लिखितं[6] ।
श्री रामजयम् ॥

Foot Note :

1. This svara phrase and the word 'Kori' have no relevance with this vama.
2. This is the Anupallavi.
3. This is the Ettugada, found without the notation.
4. A repetition of the ettugada but with an addition of the word 'Neerajakshi'. In the next stanza, the word 'Neerajakshiro' finds place.
5. This stanza may be the 'anubandham' for this varna. No svaras are given.
6. 'Indavarnam' in Tamil and 'Likhitam' in Sanskrit are found with the name of the copyist.

# आनन्दभैरवी - आदि ॥ Ms. B

॥ पल्लवि ॥

| | | |
|---|---|---|
| पमपासां:संनिरिंसंनिधपा | । पनिपपमग मप | । मा; पमगम |
| ए . .न्त . व . . . . ञ्च . न | । जे . . . .से . | । ने . वी . . डु |
| पनिपपमग - पमगारी सा; | । ;सनि॒सा - पा | । मा - पमगरिगम ॥ |
| इ . . . .न्ति . . .रो . | । .वि . . न | । . वे . . . . . . ॥ |

॥ अनुपल्लवि ॥

| | | |
|---|---|---|
| पनिपसंनिसां संरिंसंमं गांरीं | । पारिंसां निधप | । पामग नि॒सगम ॥ |
| अ . न्त र . ड्गमुवी . . डि नाडे | । अच्युत पुर . | । मान्यश्री वरदुडु ॥ |

॥ मुक्तायिस्वरम् ॥

| | | |
|---|---|---|
| पासांसंनिधपमापमगरिसनि॒ | । सागगम-गमप | । गामा पमगम |
| चालावलचिन नन्नलमरुनि श | । रम्मुलकुदगल | । जेसि पलुमरु |
| पसंनिधपम पधपसांसं-पधमप | । ,प-गरिगमाम् | । गरिसनी॒स-गम ॥ |
| जलजमुखिनियेनसिनाडु इपुडुवा | । . डु-सरसराडु | । मनुपलेडु-ननु ॥ |

एत्तुगड

| | | |
|---|---|---|
| सा; पामा पमगरि गमपम | । पा; , पनिप | । मा-पमगरिसनि॒ ॥ |
| गा.रड व...ग | । लु.देलिपे | । द-वि.न.वे. ॥ |
| सा ;;सा;; नि॒नि॒नि॒स | । गा;;गम | । पगामगरिसनि॒ ॥ |
| मु..च्च..टलअच्च | । ट..चल | । मुसेयदमिच्चट ॥ 1 ॥ |

गा,मपम गरिगा,मगरिसनि़ । सा,नि़सनि़गरि । मगरि पमगरिनि़ ।।
वेडुतलु पदि वे-लुचेलियट । नु.दिनदिनमु । बिगुवु तनयेडनु ।। 2 ।।

पा,धपममा,पमगगा,म । गरिसा,गगरि । नी़,समगरिनि़ ।।
चालरतिली.लसरसा-ल । तिवतो.विरस । मा.टलुतनतो ।। 3 ।।

सा,सा,सा-मगरिसगरिनी़ । साःनीधप । माप गामपा
ए.वे.व्य यलमदनुनिके । किन्-चा-ल । कोरुदानितो
पधपसंनिसांगंरिं संनिसं पसांनि । धपम पामगरि । सनी़स मगरिनि़ ।।
विडपलुकुमन्त्रमेतनतो मरेमि । सोगसु मेलुतोलि । यनुड्गु दलंचडु ।। 4 ।।

## 4. रागं : हुशानि ।। तालं : आदि

दयचूडवले नीवेळ । तामसमेल ।।
अ ।। निजमुगानु नम्मिति जगदीश नीवे
गतिश्रीमुदन्दीश ।।

स्वरसाहित्यम् ।।

धानि सानिरिस निधपा मपमगारि रीरि
चिल्क तेजमुन नेनु चेरकुविल्लु बट्टि
रिगमगारि साग रिस निरीनिसा रिगम
यल नानि गट्टि तन दळ्बुतो निदिगो
पामनिधपमा पसानिध निपध मपगरिगमप ।।
सारि वेडलनु दुरंबुन मरिनि मदंबणचुटकु ।।

दयचूड पालिंप समयमिपुड्डु ननु [1] ।।
सासा रिगमपाम गा रिनिरीरी गमपनिध पधमपम ।। 1 ।।
चाला केलिचिनानु ने पदिवेला ननु बिलिचि मनमलर ।।

। ई जगतिलो[2] ।

निधपमा पमगरीमगरि सा निसरिगम ।। 2 ।।
निनुविना यितरदैवमुल ने दलंचनिक ।।

माप नीध पाध माप मगरिनि सरिगाम पमगरि
नीवे नादु दैव मटंचु पलुमरु मनंबार तलचिन
गमपा मगारि सरीरिनि रिस रिगाम पधनि

तनपै बिरान कटाक्षमु युंचि बिरान तलंचु

सानिधपमाप गरिगम ।। 3 ।।

केरिकलोसंगि निरतमु ।।

सा सारिस नीधापम पा पामगरीरी गमगरि

ना जीवमु नीवेयनि नी नामरसम्बे रुचियनि

पामागरि निरि निसारिग मपा नीधपम पसासास

मुम्मा:टिकि निनु केनियाडुचु सदा वेडेद्नु पराकेल

निधप मागारि गम ।[3]

सरगुन यीवेळ ननु ।

पालिंप समयमिपुडु ननु पराकु शायकुवय्य ।[4] धानिसा ।

श्रीलोसङ्गु अच्युतपुरि वरद्नि चेलिकाड श्री उन्नतपुरीश ।। चिल्कतेज ।।

**Foot Note :**

Notation for the Pallavi, Anupallavi and Ettugada are not found.

1. 'Dayachooda' is an additional word here; the copyist might have wrongly inserted the first word of the Pallavi here again. At the end of the last ettugada svara-sahitya only 'Palimpa.....' is there and not 'dayachooda'.
2. This word has neither relevance here, nor found in the Varna.
3. The fourth ettugada svara is not numbered. This is followed by a sahitya, without notation.
4. At the end of the last sahitya part, instead of the Pallavi, the beginning svaras and sahitya of the Muktayi is found.

Ms.B contains this Varma and the version is given below:

## राग : उशानी ।    ताळ : आदि

### पल्लवि

| | | |
|---|---|---|
| । सासापा;निनिधम पनिधनि | । सां;;संनि | । रिंसंनिध धपमा |
| । द य जू . . . . . ड . व | । ले . . नी . | । वे . . . ळ . . |
| । पा;;;मपसंनिधपमा | । मगमा पनिपप | । मगपम गरिगस ।। |
| । ता...म...स.. | । मे.. .... | । .... ल... ।। |

### अनुपल्लवी

| | | |
|---|---|---|
| । पमपा पासां;सां सां; | । गंरिंसां सांसां | । संनिनी सां; |
| । नि.ज मु गा . नु नं | । मि . ति जग | । दी . . श . |
| । पा;सां,नि रिंसंनिधधपमा | । गमपनि पामा | । पमगरि गमपा ।। |
| । नी.वे.. ग...ति.. | । श्री... मुद | । दी...श.. ।। |

### मुक्तायिस्वरम्

। धा,निसांनिरिंसंनिधपा मपम

। चिल्क तेजमुन ने.नु चेरकु

। गारिरीरि-रिग । मगरिसागरिस

। विल्लुबट्टि-यल । ना.नि ग ट्टि तन

। ऩिरीऩिसा रिगमपा मनिधपम

। दळंबुतो निदिगो सा रि वेडलनु

। ,पसां निधनिप । धमप गरिगमप

। .दुरं बुन मरि । निमदंबणचुटकु

### एत्तुगड

। पाःपनिधनिसंनि धपपमगरि

। पा.लिं ... .. प.स...

। गमपा;पम । धपमगरी गम ।
। म.य.मि । पु...डु ननु ।।

1 । सा,सा,रिगमपा मगारिनि़
। चा.ल. कोलिचिनानु ने पदि
। री,री,गम । पनिधपधमपम ।।
। वे.ला.ननु । बिलिचि मनेमलर ।।

2 । निधपमा;पमगरी; । मगरिसा;, । ;नि़सारिगम ।।
। निनुविना..इतरदै. । वमुलने.. । .दलंचनिक ।।

3 । मापनीध पाधममप मगरिनि़
। नीवे नादु दैवमटंचु पलुमरु
। सरीगाम पम । गरिगमपा ;
। मनंबार तल । चिन तनपै.
। मागरि सरीरि नि़रीस रिगाम
। बिरान कटाक्ष मुयुंचि बिरान
। पधानिसांनिध । पमाप गरिगम ।।
।दलंचु कोरिक । लोसङ्गि निरतमु ।।

4 ।सांसांरिंसं नीधापम पापा
। ना जीवमुं नीवेयनि नीना
। मगरीरी-गम । गरि पामागरि
। मरसंबे रुचि । यनि मुंमाटिकि
। नि़रिनि़नि़सारिग-मपा-नीधपम
। निनु कोनियाडुचु-सदा-वेडेदनु
। पसांसांसं-संनि । धपम गारिगम ।।
। पराकेल - सर । गुनयी वेळननु ।।

## 5. राग : तोडि ।।   ताळ : अट

वलपु(न)ननु जेसे विन्तलु वनितरो नेनेमंदुने ।।
अ ।। तलिरुबोणी मा तुळज भूपालुनि
तनयुडैन श्रीशरभोजी महाराजुन गनि ।।

स्वरम् ।।[1]

गागा मगगरि रीग्री मगरिस निसरि नी सरिग
ओहो सखियरो नेने मनगल मिगुल ना तनुवु
रिगमगामगरि सरी गामग रिनिधानि सरिगम
पुलकलुन्नेगडि मरिन् झल्लनि तमिदूरि नेरयग
धाधानि धधनि सानिरिस निधम धधनि धनिसरि ।।
वेवेग चेलुनि नूअबल पलुकु दूरुल तनपयि
निगरि सनिध रीगरीनिधा निधम गामगरि ।।
नणचु मनुचु नायधरमे पदरि तानिदुगो ।।

वलपु चालल नातोने । पालिण्ड्लु नातो चाल नंदिमिने
गा गरिसरी रिगरिसरि नीधा नीसारी गामागा रिगम ।। 1 ।।
नी रविकेलो न नणगदनि ताने येंतेन्तो उप्पोङ्गि निपुडु ।।

गामग रिस रीगरिसनि धा निसरिग रीगमगरि
भामरो इति येमनुचुनु ने देलुपुदु सामि नीदु
गामध धम गमगरिनि धानिसारिगा गमध धानि धमगम ।। 2 ।।
केलुल कोनि तनमेनल पैकोनु मनुन् इकनु जागु तगदनि ।।

मापमगरि गामग रिग रीरिग रिनिधा रीरिरि गरि
सामिकिनि नीयेड बलु कोपमु कोनिनन् तात गु ओलु

रिगरि निधनिसरि गा रिगम गारि सरिग माम धधनिध
कुलनु कनगोनग ना अलुक दीरु ननुचु चाल कुलुकुचु
निस निगरिग रिसनिध निगारि सनिधनीध धमगमाग
यल चेलुवुनि सरसकु बिरान नव सनि कनिकरान
गरिनिधानि सरिगम ।। 3 ।।
चेन कराद निन्नेवग ।।

गामागग मगमाम धाधनि धानी धधमग निधम
गिल्गिंतलु कोनगोटि मीटुल मरि विरसमु कोसरु
गागरिरी गारिरिंग रिनिधनि सरिगम ।
पलुकुलु मोद्मुन तोडतोड लोरयग ।

सारिगाम धानिस निरिसनिध मधाधनि सासनि
फूलविल्लु केलिनिन् चेलंगुटकु घनंबुग रोम्मुन
गारिसनीध गमधध निसरि सनिध
गुम्मुमटञ्चु जिगिबिगि रविके बिगिलि
मगनिधधम गरिगम ।।
वगवगलनु कुलिकेने ।। पालिण्ड्लु ।।

।। श्रीरामजयम् ।।

**Foot Note:**

No svaras for the Pallavi, Anupallavi and Ettugada are given.

1. 'Muktayi svara' is mentioned as 'Svaram'.
2. The words 'Valapu chalala natone' seems to be extra, perhaps negligently added by the copyist. At the end of the fourth Ettugada svara-sahitya, we find only 'Palindlu'.

This is a Varna in honour of King Serfoji II, the composer being unknown.

## 6. राग : नीलाम्वरी ।। ताळम् : अट

ई विरहमेटुल सैरिन्तुने ओललन
एवरितो विन्नविन्तुने ।।

अ ।। वेवेगमे चेन्त घनुनि
वेङ्कटरायनितो देलुपवे ।।

सारि सासनि निसारिस निसनिसा गग सनिसग गामा ।
अल मारुडु कोपम्बुन तानटु वडिगा मरिमरि नापै ।
गमपध पामग मपाम गममप पसनीपम गमपससा
बलुविरि तूपुल दुरान कुमरुडु आननेसेने निमिषमुलो
रिसनि ससनिपा मपपनि पससनि पससरिरि सनिस
मोनल नूपुचुन् घनमुग गुरुतुलन् नुञ्चमनि मिगुल
निरिसस निप पनिपा पमग गमपनिप सनिप
जिगिबिगि गल रविके पिगिलि गुरुकुचमु लिपुडु

पनिधनिपध पपममगग ।
विटसभलतु ननु गदिमेने । ई विरहमु ।

पण्डु वेन्नल गाय ।।
पामागगम पा मधपामगग मागसा सगगम[१]
वालायमुग यी बलुकाकलनु चामैनो गिल्लेने
गामपाम,गम पामपमग गामाप मामगा
रामराम यिदि येमनगल झळझळ मञ्चुमै
गममगागसा । सनिसगग माम गममपाप पधपप
पुलकरिंपगा । तहतहलु जेंदु समयमन्दु वडिवडि

मगसनिसगगम ॥ 2 ॥
बलु चुरुचुरुमनि ॥ 2 ॥

पाधधा पपम गाम पाम मग गामरीग रिममगस
बालरो विनवे बाळि मीर निक ताळ जाल गलनटवे ।
गगमगम पाप धपाप मग मपनि सस्रि
चुरुकुमनि बलु चिच्चलु वले पयिनि नेगड
सनिसा सनि ॥ 3 ॥
गदवे यल ॥ 3 ॥

पधपपाम गमरि गमगा मगस सनीसनी सगगम गामप
मपममा गगमपा मगममा गमगगा सागगमपनि ॥ 4 ॥

गामग मपमग ममपपा मगपमा गमागस निसगगगा
सगगमपम गगमरि गरिमागगा सानि निसगगम ॥ 5 ॥

पासा सनिपा माप ममधा पा मागम गमपस सानिपनिपाम ॥ 6 ॥

नीसगगा सागगसा पानिपामपनि पसपपा मागा मरिगरि
मागगा साससनि ॥ 7 ॥

पाधप सानिप मापगाम गामपनीधप मापमगसा
नीसगगा गपपानि पपासप ॥ 8 ॥

सागगामपानि पासा नीरीसागसा सपाप पाप धानिस
पापाम निसगा गमपानिप ॥ 9 ॥

॥ राम ॥ श्रीरामजयम् ॥

**Foot Notes :**

Notation for the Pallavi, Anupallavi and Ettugada are not found. This composition has nine Ettugada svaras, out of which, only three have corresponding sahitya. The Varna is in praise of some Venkataraya by an unknown composer. Subbarama Dikshitar has given this in his 'Sangeeth Sampradaya Pradarsini' as a composition of 'Poorveekargal'.

1. The first ettugada passage should end here, though, it is not marked so.

The version found in the "Sangeeta Sampradaya Pradarsini".

## चौकवर्णम् ।। ।। नीलाम्वरी - अट ।। पूर्वीकुलु

### पल्लवि

। ;;;; सा,रिसा,निनीसनि ।

। ....ई.....वि.. ।

। निसा;सा;सरिनिसा,गगा,म ।

। ह .... मे .. टु .. ल . ।

। गमपम पमगम । रिगगरि पमपम ।।

। सै ... .. .. । तु .. ने ... ।। a

। गा; मा; मा गमपा;मागा ।

। . . . . . . . . . . . . ।

। ;गागापामा वध निधनिध पामग ।

। .ओ ... ल . .. .. ल .. ।

। गमपम पमगम । रिरिगा रिगमप ।।

। न ... .. .. । ने .. .. .. ।।

। मगारिगा; मामा-सा,निनी सनि ।

। .. .. . नी . . . वि र . ।

। निसा;सा;सरिनिसा, गगा,म ।

। ह .... मे .. टु . ल .. ।

। गमपम पमगम । रिगगरि पमपम ।।
। सै ... .. .. । तु ... ने ... ।। a
। मगरिगा मपस सनिधनिसा, निनिसानि ।
। ने .. ये व .. रि . . . . तो . . . ।
। पा ः मा ः मगगम पाधनि निपाम ।
। .. .. वि ... न्न .. ... ।

।गमपम पमगम । रिगगरि पमपम ।।
। विं .. .... । तु ... ने ... ।।

## अनुपल्लवि

। ;;;; गापमा पा पमपनी
। .... वे .. वे ....
। धनिपमा-पमप-पनीप-मपाम-गमपम
। ग..मे ... चें .. ... त ...
। गरिगम गपमग । ममपा पा;
। .. घ.नु... । नि.. ..
। पासा;सा-सनिनिधनि सा;निनिस
। वे ... ङ्क . ट .. .. रा ..
। ,निपप-मपधनी,धनिसा,नि निसानि
। ....य ... नि .. तो ..
। पपमा गमपनि । पपमग रिगरिग
।...दे...। लु... प...
। मागागासा *
। .. .. *

## मुक्तायिस्वरम्

। ;;;; सरिसासनिनीसा रिस
। .... निनुनम्मिन नापै निक
। नीसनि सगगा सनिसग गामागम पनि
। कोपमु तगुना अनुवुग ना माटलु विन

। पामग मपाम । गममप पससनि
। वेचेलि विराळि । दयितुनि बलुगा

। पमगमपससारिस निसस निपम गमपनि
। रवमुलुबिगि कौगिट नलमुचुनुत मकुपु म

। पससनि पससरि रिसनिसनिरिस सनिप पनि
। रुवडिन धरमुन नुकक्कडु पलुकु दुगुरु नुप
। पपमग गमपनि । पसनिप पनिधनि
। गनतिप लिकिते नि । जमुगनिदि समय
। पधपप ममगग
। मिदिननु कनुगोन

## ।। चरणम् ।।

। ;;;; गम पा; पा; पग
। .... म . श्चि . पं ... b
। गमपपधनिधनि पा,म मगा गमापध
। डु . . .  . . . वे . . . न्ने . . .

। निधनिध पा,म । गमपम पमगरि

। ल . . . . . । गा . . . . . . .

। गा,मपममा *

। य . . . . *

1. । पा;मा;;; मा; गा.गा

। भा.मा... म. णि .

। मा; पा;;; पा; माधा

। वे . मा ... रु . नु .

। पा; मा गा । गामा; गा

। ने. मि गु । ल जा . लि

। सा सा गा गम *

। जें दि ति विनु *

2. । गाम पाग गमपा; मपमगगा;

। सामि नेड्डु दयतो . सोगसुगने.

। माप मामा गारि गमगाग सासऩि - स

। मुद्दु गुम्म वद्दनु मुदंबु मीरग - व

। गगमा ;, म । मग मम पाप म

। गलगा .. ल । रतुल.नेलयि

। गसऩी सगगम *

। दे . तो डलधरेनु *

3. । गा; मगमप मा; गममप पा;
। हा . यिगकलसे . नेरतन मे.
। मगपमाग मागसऩि सागगा,सगग
। मनिनुतिन्तु नीयेदनु कामिनी . सदयु

। मपमगमरिगरि । म माग गागा
। निदलचिते पुलक । लु मेनु निण्डा

। सासऩि सगगम *
। नुप्पदि ले . नु *

4. । पा,धधा;, पपम गा, मपा;,
। ए . ल ने .. वलचि पे. लनै ..
। ,म-गमपाम गाग मरि मगसा गगाम
। ,ति-गतिलेनि पोनि दिन तगुना सरोज

। गमपा पधपा । पमगम पनिपसं
। मुखिनी पदमा । वगदलचि देरनि

। रिंसंनिसांसंसंनि *
। मिषमु ताळदुपं *

5. । पा; पा; मगमप नी; धा;
। ए . वे . ळ तोडरि नी . दा.
। निपम-पांपमग-पा, म गा, मरिग-री
। ननुचु- वेड्डुक्नेन-क्ने.टिसे.यकुनु-बो

।मगा मगस नी । ;स सागगम
। टिरो विनवे ये । .टि-तामसमु

